**அஞ்ஞானம் மூடிக்கொள்ளும் விதம்.**—ஓர் ஊரில் கிழவி ஒருவள் தோசைவார்த்து விற்றுப் பிழைத்துக் கொண்டுவந்தாள். அவள் தினம் ஒழுங்காக ஸூர்ய உதயத்திற்கு இரண்டு நாழிகைக்கு முன் எழுந்து தனது தொழிலைத் தொடங்குவது வழக்கம். அவளிடம் ஓர் கோழி ஒன்றிருந்தது. அது தினம் தவறாமல் உதயத்திற்கு இரண்டு நாழிகைக்கு முன் கூவி அவளை எழுப்புவது வழக்கம். கோழி தினம் கூவப் பின் பொழுது விடிந்து வருவதைக் கண்ணுற்று வந்த அவளுக்கு காலக்கிரமத்தில் தன்கோழி கூவாவிட்டால் பொழுதுவிடியாது என்றநம்பிக்கைவந்துவிட்டது. இப்படியிருக்கையில் அந்த ஊரில் சில சிறுவர்கள் இந்தக்கிழவியை பரிஹாஸம்பண்ணிகோபம் மூட்டிவிட்டனர். கிழவிக்குதேகம்தெரியாதுகோபம் வந்ததும், 'பார் இந்தப் பயல்களுக்குசொல்லுகிறேன் வழி! என் சக்தி இவ்வளவு என்று இவர்களுக்குக்காட்டிவிடுகிறேன்! நான் என்கோழியைக்கொண்டு அடுத்த கிராமம் போய்விடுகிறேன்! இங்கு எப்படிப் பொழுது விடியும் பார்ப்போம்? இந்தப் பயல்கள் விடியா இரவில் அழுந்திவருந்தட்டும்!' என்று முறுமுறுத்துக்கொண்டு, அன்றிரவே அடுத்த கிராமம் போய்விட்டாள். மறுநாள் சிலர் முதல் கிராமத்திலிருந்து இரண்டாம் கிராமத்திற்கு வர, தோசை விற்கும் கிழவி அவர்களை நோக்கி, 'என்னை நீங்கள் கோபம் மூட்டாது வைத்துக்கொண்டிருந்தீர்களாகில், இந்தக் கஷ்டம் உங்களுக்கு வந்திராதே! ஐயோ, பாவம்! உங்களைப் பார்த்தால் எனக்குப் பரிதாபமாக இருக்கிறது! நீங்கள் விடியா இரவில் அகப்பட்டுக்கொண்டீர்களே!' என்றாள். அவர்களுக்குவிஷயம் ஒன்றும் விளங்காது போக விழித்தார்கள். அப்பொழுது இவள் தன் கதையை ஆதியோடந்தமாகச் சொல்லி, 'நான் என்னுடைய கோழியைக்கொண்டு இங்கு வந்துவிட்டேன். ஆகையால் அங்கு எப்படிப் பொழுதுவிடிந்திருக்கும்?' என்று மிகுந்த கம்பீரமாகக் கேட்டாள். இந்தக் கிழவியினது மூடத்தனத்தையும், சர்வத்தையும், அகங்காரத்தையும் கண்டு வந்தவர்கள் சிரித்த சிரிப்புக்கு அளவே இல்லை. இதேமாதிரி தான் நாமும் அகங்காரம் கர்வம் முதலியவற்றிற்கு ஆளாவது. நாம் உபகாரம் செய்யும் குணமுள்ளவர்களாயின், நாம் இல்லாவிடில் ஏழைகள் பிழைக்கமாட்டார்கள் என்ற கர்வம் நம்மை அறியாது நம்மை மூடிக்கொள்ளும். நாம் ஏமாந்து இருந்துவிட்டோமாகில், நம்மை நன்றாக அது கீழ்ப்படுத்திவிட தோசைக்காரியின் மூடநிலைக்குக் கொண்டுவந்து விட்டுவிடும். இந்த ஸமயங்களில் 'கிருஷ்ண பரமாத்மா முதலிய பகவத் அவதாரங்கள்கூட உலகைவிட்டுப்போன பின்பும் உலகம் முன்போலவே நடந்துவரவில்லையா? இப்படி இருக்க நாம் எந்தமூலை'? என்றிப்படிமனனம் அடிக்கடிசெய்தால் தோசைக்கிழவியாகிவிடாமல் நாம் புத்தியோடு கடைத்தேறலாம்.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

**LADIES' PAGES**

---

## ஸீதை அல்லது தர்மத்தின் ஸ்வபாவம்

### 3. உலகிற்குழைத்தகாதை.



பிறர் துக்கப்படும்பொழுது அவர்க்கு நம்மால்உதவிசெய்யமுடியாதென்பது உயர்ந்தகுணமன்று. தம்மால் அவர்க்குதவிசெய்ய வலிமை இல்லைஎன்பது, தமக்கொருவர்க்கு உதவிசெய்ய மனமில்லை என்பதைக் காட்டுகிறது. அன்பானது தன்னுடலிலும் மனதிலும் ஊறுமாயின் தனக்கும் தெரியாது வலிமை பெருகி பிறர்க்குதவிசெய்யத் தூண்டும். இது அன்பின் ஸ்வபாவம். இவ்வகையான எண்ணத்தோடு தான் சடாயுவென்னும் கழுகரசன் இராவணனை எதிர்க்கவந்தான். ராமா, ராமா வென்றொலித்த காற்றானது இவரதுகாதில் விழுந்ததும் துயருற்றாள் ஸீதை என்று அவர்க்குத் தெரிந்தது. இதற்குள் வாடியமுகத்தோடு ஸீதையும், அகந்தைமலர்ந்த முகத்தொடு இராவணனும் அவர் எதிரில் வந்துவிட்டார்கள். படபடத்தமனத்தொடு தன் எளிய இறகுடைய உடலொடு இராவணனை எதிர்த்து மாரியாக அம்புகளை ஏவினர். இராவணனதுகொடுங்கணையால்குறையுயிரும் குற்றுயிருமாக விழுந்திருந்தார் சடாயுவென்னும் அன்பிற் குயிரின வந்தோன்.

தனது கணவனது மொழிகளை கேளாது கொடியோன் மொழியைக் காதாரக்கேட்பது, கொடியாரதுகையுளிருத்தல், இன்னனசெய்ய வேண்டுமென்று அறியாப்பேதமையோடு விளங்கல், ஆகிய இவ்வகையான துயருள்பட்டு வாடியவட்கு புண்ணியமூர்த்தி போல் வந்த சடாயுவும் குறையுயிரும் குற்றுயிருமாக விழுந்தது எவ்வாறு இருக்கும்? கொடியார் கைக்குள் சிக்கும்பிராணி, அச்சிக்கலை வாங்கத் தெரியாதெவ்விதமலையும்? இதனுடன் தன் கணவனை அறியாது தனக்குவந்த கதி ஸீதையை துன்பப்படுத்தாதா? தன்னை எவ்வாறு இராமன் எண்ணுவான் என்று அவளுக்குப்படும்? வேண்டாமென்று சொல்லிய லக்ஷ்மணன் மொழியைக்கேட்காததாலிவ்வாறு முடிந்ததோ? லக்ஷ்மணன் என்னென்னவென்று இராமனிடம் சொல்லினனோ? அவனும் நமக்கு பகைவனாகி விடுவனோ? என்ற இவ்வெண்ணங்களும் ஸீதைமனதைக் குடைந்திருக்குமல்லவா? தன் நடத்தையைப்பற்றி என்ன இராமன் எண்ணிக்கொள்வனோ என்ற ஸந்தேஹமும் அவளுக்குண்டாகிவிட்டது அதுவுமல்லமாமல் ஸ்திரீகளது ஸ்வபாவமும் ஒருவரைச்சார்ந்து இருத்தலாகையால், அச்சேர்க்கை எங்கு நெகிழ்ந்துவிடுமோ என்ற எண்ணமு மிவை எல்லாம் கலந்து அவள் மனதைக் கலக்கிவிட்டன.

“யான் ஓர் அணுவேனும் என் கணவனுக்கு தவறிருந்ததுமல்லாமல், இப்பொழுதும் என் கணவனே என்னுயிராக இருக்குமாயின் இக்கழுகு என்நாதனைக் காணுமட்டு உயிர் நீங்காது என் துயரமும் யானிருக்குமிடமும் கூறும்படி உயிரிருக்குமாக” என்று சொல்லிக்கொண்டு ஒன்றும்தெரியாது மயங்கினள். இதற்குள் அவள் மனம் பதைபதைத்தது. “யான் ஸத்யவாதியாயின் என்ன? அன்றி நன்னடத்தையளாயினுமென்ன? நம்முடைய கஷ்டகால ஸம்பவத்தில், எல்லாம் கெடுதியாக முடியினும் முடியும். எதுவேனு எப்படியாயினு முடியட்டும். “சிறைகாக்கும் காப்பெவன் செய்யு மகளிர், நிறைகாக்கும் காப்பே தலை” என்ற விதம் என் மனத்தைக் காக்கவேண்டும். அதுவுமன்றி என் தலைவனை அடையும் விதத்தையும் செய்யவேண்டும். ஸ்திரீகளது கற்பை யழிக்கவேண்டுமென்ற இந்த துராத்மாபோல்வார் யாவரையுமழிக்க யானே காரணமாகவேண்டும். எதுவும் என் தலைவன் ஆஞ்ஞை இன்றி செய்யமுடியாது. அதை அவரே செய்யட்டும். நமக்குக் கஷ்டம்தான். நாம் படவேண்டியதுதான். நன்மைக்குழைத்தால் கேடுவராது” என்னும் எண்ணங்கள் அவள் மனத்தில் உதித்திருக்கலாம் என்று தோன்றுகிறது. தன் கணவன் தன்னை நாடிவரவேண்டுமென்பது தான் அவள் முதல் வேலை. “சடாயுவை அவர் கண்டாலும் காணலாம். காணாது இருந்தாலும் இருக்கலாம். ஆனதால் இராமரை என்னிடம் வரும்படிச் செய்ய வேறு ஏதேனுங் கூட உபாயம் செய்யவேண்டும். யானிவ்வரக்கனோடு போகும்போது, இந்நகைகள் எனக்கேன்? அதைக்கண்டானந்த மடையும் கண்கள் காணாது இருக்க மற்றக்கண்கள் இவைகளை பார்ப்பது ஏன்? இவைகளை எடுப்பேன். ஓர் கிழியிலடக்கம் செய்து கீழ் எறிந்து விடுவேன். என் நாதன் அவற்றை ஒருவேளைக் கண்டால் நாமிருக்கும் நிலைமை அவர்க்குப்படும். அன்றியும் அவர் நம்மைக்காணாவிடில் இவை தாம் நமக்கேன்” என்று எண்ணிக்கொண்டு தன் சீலையில் ஒரு பாகங் கிழித்து அக்கிழியில் தன் நகைகளை எல்லாம் முடிந்து எறிந்து விட்டாள்

இலங்கையும் நெருங்கிவிட்டது ஸீதையைத் தன் அரண்மனையில் வைத்து தன் செல்வப்பெருக்காலடக்கி விடலாமென்பது இராவணனது கவலை. அவன் செல்வமெல்லாம் அவளுக்குத் த்ரணமாகப்பட்டது. அவளை பயமுறுத்தி வழிக்குக்கொண்டு வரவேண்டுமென்று எண்ணங்கொண்டு ஸீதையை அசோகவன மென்னும் தோட்டத்திலிருத்தி ராக்ஷஸிகளை, அவளைக் காத்து தன் வழிக்குக் கொண்டு வரும்படியாய் செய்யவேண்டு மென்று ஆஞ்ஞாபித்தான். அவனுடைய வழிகளெல்லாம் ஸீதைகொண்ட மனநிலைமையைத் தடுக்கவில்லை. ராமநாமஸ்மரணை என்கிற மந்திரத்தைக்கொண்டு பலநாளும் வருந்தி கடவுளது அனுக்கிரஹம், என்று வருமோ என்று கவலைகொண்டு, தூக்கமில்லா இரவுகளைக் கழித்து வந்தாள் கடைசியில் அவளுக்கும் தெரியாமல் ஓர் மயக்கமுண்டானது போல் ஆகியது. எதிரில் ஓர் ஸுந்திர புருஷன் தோன்றினற்போல அவளுக்குப் பட்டது. “யான் இந்திரன் நீர் பயப்படவேண்டாம், தேவானுக்கிரஹமுமக்கிருக்கின்றது. நீர் பயப்படவேண்டாம். இப்பாயஸம் அருந்தும் உம்முடைய கஷ்டத்தால் ஜனங்களுக்கு ஸுகமுண்டாகும். இப்பாயஸம் பசி பிணி நித்திரை முதலியவின்றி என்றும் ஸுகமுண்டாக்கி வலிமையூட்டும். உமது விரதத்தைக்காக்கவேண்டும்” என்று சொல்லிவிட்டு, ஸீதைஅப்பாயஸ மருந்தியதும் மறைந்தது ஓர் உருவம்.

ஸீதைக்கு ஒரு நம்பிக்கை உண்டாகிவிட்டது. தான் எண்ணிய எண்ணமே நிஸ்சயமாகப் பட்டதாகப்பட்டுவிட்டது. தான் உலகிற்கு கஷ்டப்படவேண்டும் என்றும் அவளுக்குப்பட்டது. தன்னினத்தாரது கஷ்டத்தைப்போக்க, தான் கஷ்டப்பட நிஸ்சயம் செய்துகொண்டாள். ஆனால் நிஸ்சயம் செய்துக்கொண்டவரை கடவுள் பரிக்ஷைசெய்வது வழக்கம்தான். அதுபோலவே இராவணனும் ஸீதை அருகுவந்து தன்னைச்சேரவேண்டுமென்று வாயொடுங்காது கேட்டதும், அவள் விழித்த விழியொன்றே அவனை அகலச்செய்தது. இராக்ஷஸிகள் ஸீதையை வருத்தியது கொஞ்சமல்ல. அவ்வளவையும் பொறுத்தாள். அவர்செய்யும் இராமதூஷணமொன்றே ஸீதையின் மனத்தைக் குடைந்து விட்டது.

"ஸதா அவர்செய்யும் க்ரூரஹிம்ஸையையும் பொறுத்தேன். கொடியன் சொல்லுமொழியையும் பொறுத்தேன். என் தலைவன் என்னை நாடி வாராமலிரார் என்று உயிரையும் வைத்துநிற்கிறேன். அவர் எண்ணமென்னமாகியதோ தெரியவில்லை. எனக்கு நம்பிக்கைமாத்திரம் எனக்கும் தெரியாமலிருக்கிறது. எம்பெருமானது வில்லுடைய மஹிமையைக் குறைக்கக்கூடாதென்னு மெண்ணங் குடிகொண்டு பொறுமையுடனிற்கிறேன். ஓர் வாய்மொழி ஒன்றேபோதும், இராவணன் மண்ணாய் விடுவன். அவர் பெருமை குறையக்கூடாதென்று பார்க்கின்றேன். அவர்க்கு நம்மிடத் தன்பில்லைபோலும். நான் இருக்கும் இடம் அன்னிய தேசம்—நம் நாதனது பகைவன் வீடு—பழிக்கும் இடம். இங்குவந்தும்,அவரைக் காணலாமென்னுமாசையால் வாழ்க்கையை ஓட்டிக்கொண்டிருக்கிறேன். ஆனால் அவர்க்கு யான் சௌக்கியமாக பிறரது வீட்டிலேயே இருக்கிறேன் என்று பட்டுவிட்டாற்போல் இருக்கிறது. பிறர் வீடுசென்ற பெண்ணைத் தான் கொள்ளக்கூடாதென்ற எண்ணமிருப்பினு மிருக்கலாம். இனி நானிருந்தென்ன? இறந்தென்ன? அவரதுபெயர் கெடும்படியாக யான் இங்கு வாழ்வது தத்தியல்ல. இனி என் உயிரை தரிக்கமாட்டேன்" என்று எண்ணிக்கொண்டு, "ஏதோ இன்று அரக்கியரும் தூங்குகிறார்கள்" என்று சொல்லிக்கொண்டு தன்னுயிர்க்கொலை செய்துக்கொள்ள ஓர் மாதவிப் பொதும்பருள் சென்றாள். அங்கு சென்றதும் "அண்டர்நாயக னருள்தூதன் யான்" என்று ஓர் வாக்யம் ஸீதை காதில் வீழ்ந்தது. "யார் அண்டர் நாயகன்" என்னும் ஸந்தேஹம் ஸீதைக்குண்டாகி தலை நிமிர்ந்தாள். "அடைந்தனன் அடியனேன் இராமன் ஆணையால்" என்று ஹனுமார் கூவிக்கொண்டு, ஸீதை பாதாரவிந்தங்களில் நமஸ்கரித்து நின்றார். ஸீதைப் பார்த்ததும் பயந்தாள். அவரை நம்பவில்லை. அவருடைய நடத்தையைக் கண்டு அவரோடு பேசலாமென்றெண்ணினாள். அவரை, இராமர் தூதன் என்று நம்புவதெவ்விதம் என்று கேட்டாள். அவர் இராமவர்ணனை செய்து, அவர் கூறிய சில அடையாள மொழிகளும், அவர் கொடுத்த கணையாழியையும் கொடுத்தார். தன் பேருருவத்தையும் காட்டி அவளுக்கு தைரியமூட்டினார். ஸீதை இராமர்மேல் மஹா நிஷ்டூரம் செய்துவிட்டு என்மேல் இராமருக்கு அன்பென்பதே கிடையாது. வரும் வழியில் கங்கையாற்றங் கரையில் என்னைக் குறித்து அர்கியக் கடனையும் செய்து ஸுகமாக அயோத்தி சென்று வாழச்சொல்லும் என்று சொன்னாள்.

ஹனுமார்க்கு கோபமூண்டுவிட்டது. "நல்ல காரியங்கள் உன்னால் ஆகவேண்டியிருந்தால் நீ கஷ்டப்படுவது அதர்மமோ? உன் கணவனை வைவதால் ஸுகமோ? ஜனஸமூஹத்திற்கு உன்னால் நன்னாள் வருவதாயிருந்தால் நீ கஷ்டப்பட்டுத்தான் தீரவேண்டும்" என்று கண்ணில் தீப்பொறி பறக்கச்சொன்னார்.

ஸீதைக்கு கோபமடங்கிவிட்டது. தான்செய்த அபராதத்தை மன்னிக்கும்படிக் கேட்டுக்கொண்டாள். "இன்னமொருமாதத்திற்குள் என் தலைவனை யான் பார்க்கவேண்டும். அந்த ஆத்திரமே என்னை இவ்வாறு செய்யச்செய்தது. யான் கோபாவேசத்தில் கூறிய மொழிகளை இராமர்பால் சொல்லக்கூடா"தென்றுக் கேட்டுக்கொண்டாள்.

(தொடரும்).

# விசேஷ வர்த்தமானங்கள்

## GENERAL NEWS

**இந்தியாவின் பருத்தி யந்திரசாலைகள்.**—1882-ம்வருஷத்துக்குப்பிறகு பருத்தி யந்திரசாலைகள் நூற்றுக்கு 366 மடங்கும், மூலதனங்கள் அதிலும் மும்மடங்கும், யந்திர சாலையில் வேலைசெய்பவர்கள் அதிலும் நான்கு மடங்கும் அதிகரித்ததாக கணக்குகளில் தெரிகிறது. நூற்றுக்கு தறிகள் 440 மடங்கும், கதிர்கள் 348 மடங்கும் முன்னிலும் அதிகரித்திருப்பதினின்று நம் தேசத்தில் இத்தொழில் முயற்சி போகும் வழி இத்தகைத்தன்று தெரிய வருவதால் இவ்விஷயம் கவனிக்கத்தக்கது. 1903-ம் வருஷத்துடன் முடியும் 20 வருஷங்களுக்குள், தறிகள் முன்னிலும் 2,8600 அதிகரித்திருக்க, அதற்கடுத்த ஐந்து வருஷங்களுள், அதாவது 1908-ல் 1903-ம் வருஷத்தைக் காட்டிலும் 23,000 அதிகமாக இருக்கிறது. ஐந்து வருஷங்களுக்குமுன் 113-அறைக்கும் (Spinning) யந்திரசாலைகளும், 4-நெசவு சாலைகளும், இரண்டும் செய்யும் சாலைகள் 84-ம் ஆக இருக்க, 1908-ம் வருஷத்தில் அவைமுறையே, 98-ம், 13-ம், 116-ம் ஆகிவிட்டன.

* * *

**1908 ௵ உற்பத்தியான பருத்தி.**—அமெரிக்காவிலுள்ள ஐக்கிய நாடுகளில் மூட்டைஒன்றுக்கு 500 ராத்தல் பருத்தி அடங்கிய 18,537,306-மூட்டைகள் 1908-௵ல் உற்பத்தி செய்யப்பட்டதாம். இச்சங்கியை 1907-ம் ௵ உற்பத்தி செய்யப்பட்ட பருத்தியைவிட 2,211,845-மூட்டைகள் அதிகமாம். அதாவது 100-க்கு 19. 4-அதிகம். இவ்வளவு அதிகமாய் உற்பத்தியான வருஷங்களில் இவ்வருஷம் மூன்றாவது. 1904, 1906 வருஷங்களில் இதைவிட அதிகமாயிருந்ததாம். சென்ற ஐந்து வருஷங்களுடைய சராசரி உற்பத்தியைக்காட்டிலும் 10-லக்ஷம் மூட்டைகளதிகமாயிருக்கிறது. இவ்வருஷம் எடுக்கப்பட்ட பருத்திக்கொட்டை 5, 903, 838 டன் இதில் 3, 669,747 டன் இயந்திரங்களினால் எடுத்துக் கொள்ளப்பட்டது. இதன் கிரையம் 86, 092, 583 டாலர். இயந்திரங்களினால் இப்பருத்திக்கொட்டையிலிருந்து செய்யப்பட்ட பொருட்களாவன எண்ணெய் 146, 789, 880 காலன்கள், புண்ணாக்கு முதலியவை 1,491, 752 டன், ஒடு 1. 330, 283 டன்,

* * *

**கொப்பரை.**—தற்காலம்தேங்காயை இரண்டாய் உடைத்து வெய்யிலிலாவது, அல்லது வேறு சூட்டினாலாவது காயவைத்துகொப்பரைசெய்யப்படுகிறது. இவ்விதமாய் தேங்காயிலிருக்கும் நீரை எடுத்தவுடன் கொப்பரையை ஒட்டிலிருந்து லகுவாய் எடுத்து ஏற்றுமதி செய்யப்படுகிறது. ஆனால் இவ்விதம் காயவைக்கும்பொழுது சில பூச்சிகள் அந்த மிருதுவாயிருக்கும் தேங்காயிற்குள் புகுந்துவிடுகிறது. இதனால் கொப்பரைகள் பெட்டிகளில் அடைக்கப்பட்டு ஏற்றுமதி செய்யப்படுவதனால் வெளிதேசங்களில் இறக்கும்பொழுது ஓர் கெட்ட நாற்றம் கொடுப்பதுடன், ஒருவிதமாக பூச்சு கொப்பரைமேல் பூசப்பட்டுமிருக்கிறது. இவ்விதமான கொப்பரை ஆட்டி எண்ணெய் எடுத்தவுடன் இவ்வெண்ணெயை நன்றாய் சுத்தம் பண்ண வேண்டியிருக்கிறது. பாரிஸ் நகரத்திலிருக்கும் மிஸ்டர் டைபோஸ்கி என்பவர் இக்கொப்பரை இவ்விதம் கெட்டுவிடாமல் காக்க யுக்தி கண்டுபிடிக்க வெகுகாலம் பரீட்சை செய்து கடைசியில் ஓர் வழி கண்டுபிடித்திருக்கின்றாராம். அது யாதெனில் கொப்பரையை காயவைக்கும்பொழுது சில இயந்திரங்களினால் கந்தகத் திராவகத்திலிருந்து ஓர் ஆவி உண்டுபண்ணப்பட்டு இந்த ஆவியை குழாய்கள் வழியாய் காயவைத்திருக்கும் கொப்பரைமேல் பரவும்படிச் செய்யப்படுகிறது. இவ்விதம் காயவைக்கப்பட்ட கொப்பரை நிரம்ப நாள்வரையில் கெடாமலும் பின்பு இவைகளிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய்யை சுத்தஞ்செய்யவேண்டிய அவசியமில்லாமலுமிருக்கிறதாம். இவ்விதம் காக்கப்படாத கொப்பரைகள் கொஞ்ச நாட்களுள் கெட்டுவிடுவதுமன்றி எண்ணெய் வெகு அசுத்தமாய் விடுகிறதாம். கொப்பரை வியாபாரத்துக்கு இது ஓர் நன்மையாயிருப்பதால் இதை கொப்பரை வியாபாரிகள் உபயோகப்படுத்துவார்களென்பதற்கு ஸந்தேகமில்லை.

* * *

**இவ்வுலகத்திலுள்ள பருத்தியுற்பத்தி.**—இவ்வுலகத்திலுள்ள பருத்தியுற்பத்தி 1906 வருஷமாகிற ஒருவருஷத்தில் மொத்தக்கணக்கில் 19, 900,000 மூட்டைகளாகின்றது. இதில் ஐக்கியமாகாணம் 13,000,000-ம், பிரிடிஷ் இந்தியா 3, 700,000-ம், ஈஜிப்ட் 1,400,000-ம், மற்ற எல்லா தேசங்களுமாய் 1,800,000-ம் கொடுக்கின்றன. 1907 வருஷம் ஜெர்மெனி தேசத்திலிறக்குமதி செய்யப்பட்டதில் 100-க்கு 68-1 ஐக்கியமாகாணத்திலிருந்து வந்ததாம்.

* * *

**தென்னைமரம்.**—ஒவ்வொரு பாகமும் எவ்விதமாயாவது உபயோகமாகிறது. அடி மரமானது, கால்களுக்கும், வேலிகளுக்கும், வீடுகட்டுவதற்கும்; இலைகள் (ஓலைகள்) வீட்டுக்குக் கூரைபோடுவதற்கும், சில இடங்களில் சாப்பாடுவைத்துக்கொண்டு சாப்பிடுவதற்கும், குதிரை ஆடு மாடுகளுக்கு படுக்கை விரிப்பதற்கும்; மட்டையான நார்கள் வாயிலில் கால் தேய்த்துக்கொள்ள இடும்பாய்களுக்கும், உரப்பான துணிகளுக்கும், உபயோகப்படுகின்றன. இளநீர் ஒரு சுகந்தருகிற பானமாயுபயோகப்படுகிறது. காயப்போடப்பட்ட கொப்பரை வியாபாரத்துக்குபயோகமாகிறது. இக்கொப்பரையிலிருந்து எடுக்கப்படு மெண்ணெய் உணவு பாகத்துக்கும், சவர்க்காரத்துக்கு முபயோகமானது. தென்னமரத்திலிருந்து எடுக்கப்படும் கள்ளை நுரைக்கவைத்து தெளியவைத்தால் 'அரக்கு' என்று சொல்லப்படும் சாராயமாயுபயோகப்படுகிறது.

ஆரியசகோதரிகள் சங்கம்.- இச்சங்கம்என்று பெங்களூரில் 1908௵ மேமீ 28உ ஸ்தாபிக்கப்பட்டது.

ஆதியும் பகவனுமிருவருக்குப் பிறந்த மூவிரண்டொரு மக்களுள் உப்பை என்னும் அம்மை தனது குழவிப் பருவத்தில் ஈச்வரன் திருவருளால்,

"அத்திமுத லெறும்பீ ரானவுயிர்த் தனைக்கும்
சித்தமகிழ்ந் தளிக்குந் தேசிகன் —முற்றவே
கற்பித்தான் போனானோ காக்கக் கடனிலையோ
அற்பனோ வன்னா யரன்"

என்றுசொல்லிய திருப்பாட்டின்படிக்குஸர்வ சங்கல்பங்களையும் பகவானுக்குச் சமர்ப்பித்து, இவ்வூரிலுள்ள பல மங்கைகளுள், தயாசிந்திதர்களாயுள்ள சிலர் அன்பார்ந்த ஒற்றுமை யூக்கத்துடன், தங்கள் தங்கள் அறிவு என்னும் விதைகளைப் பயிர்செய்ய சங்கமெனுமோரிடங்குறித்து அதில் சென்ற ஒரு வருடமாகப் பிரசங்கமெனும் மழையினுதவியினால் உழவு செய்துவந்த விவரங்களனைத்து மியாவருக்குந் தெருவிக்குமாறு சென்ற புதன்கிழமை(1-9-09) இராயபஹதூர் ஆற்காடு நாராயணசாமி முதலியார் ஹைஸ்கூல்ஹாலில் முதல் வருடோற்சவங் கொண்டாடிய காலத்து' மைசூர் ஸமஸ்தானம் சீப் இஞ்சினீயர் பிரம்ம ஸ்ரீ - Y. ஸ்ரீனிவாசராவ் அவர்கள் தருமபத்னியாகிய மாது ஸ்ரீ கமலாபாய் அம்மாள் அவர்கள் அக்கிராசனாதிபதியாக வீற்றிருந்து காரியங்களை நடத்தியபடி பகர்வாம்.—

சிறுமிகளைப் பார்த்துத் தோத்திரம் சொல்லும்படி அக்கிராசனாதிபதி விரும்ப.—

"பனைக்கை மும்மத வேழ முரித்தவ
னினைப் பவர்மனங் கோயிலாக் கொண்டவ
னனைத்து வேடமா மம்பலக் கூத்தனைத்
தினைத் தனைப்பொழுதும் மறந் துய்வனோ."

என்ற அதியற்புத தேவாரம், சுந்தரலிங்க செட்டியார் செல்வக்குமரி ஷண்பகவல்லி அம்மாள் உருக்கமாயும் இனிமையாயும் சபை முழுமையும் தம்பிக்குமாறு பாடியமர்ந்தபின்பு, இராய்பஹதூர்- கேசரி-ஐ- யிண்டு- ஆ. மெய்கண்ட தேவ முதலியார் அவர்களின் அருமைப்புதல்வி பத்மாட்சி அம்மாளும், அவள் தோழி, தி. பெ. கோதண்டராம முதலியார் மனமகிழ் குழவி, தங்காபாயம்மாளும் ஒருமித்து, அலங்கிருதமா யிருந்த நந்தவன மேடையின் மீது தோன்றி, காலத்தை வீணே கழிப்பது ஈசன் அங்கீகரிக்காத விஷயமென்று சிறுமிகளுக்குகந்த சம்பாஷணை மூலமாய் தர்க்கித்துக்கொண்டிருந்த சமயம் ஷெ ஷண்பகவல்லி அம்மாளும் சேர்ந்து அச்சித்தாந்தத்தை மூவரும் பேசி பலநூல் மேற்கோள் பாமாலைகளால் சபை ரமிக்கப்பாடியும் பாஷித்தும் தங்கள் மற்றொரு தோழி வி. சே. ஆறுமுக முதலியாரின் புற மகள் பொன்னம்பிகை அம்மாள் காரைக்கால் அம்மையார் புராணப் பொழிப்புரை யன்புடன் ஒப்பித்தும், இத்யாதி குணங்களுற்பவிக்குஞ் சங்கத்தாபித மத்யாவசியகமெனத் தீர்மானித்துத் திருஅங்கமாலையோதி யேகியதும், மந்திரத்திற் சிறந்தது பஞ்சாட்சரம் ஆதலால் அதனை ஜெபிக்கும் முறையும், ஜெபித்தபின்பு உண்டாகும் அன்பும், அவ்வன்பின் தெளிவால் ததும்பிய பக்தியை விதைத்து சந்தோஷமாகிய நீரைப் பாய்ச்சுகின்ற சிவனடியார்களுக்கு ஆனந்த வடிவான கடவுளருள்வது உண்மையென்னுங் கருத்தடங்கிய பெரிய புராணம் அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவராகிய "பெரு மிழலைக் குறும்ப நாயனார்" திவ்ய சரிதையை மேற்சொன்ன அம்சங்கள் ஒவ்வொன்றிற்கும் பொருந்துமாறு வெகு சாமர்த்தியமாயும், சமயோசித உவமான உவமேய காவியங்கள் அத்தாட்சி ரூபகமாயும், கமிசேரியாட் எஜண்டு ஏகாம்பர முதலியார் தருமபத்னியாகிய ஏ. ஆண்டாளம்மாள் அவர்கள் பிரசங்கஞ்செய்ததினால் சபையில் கூடியிருந்த யாவற்று சகோதரிகளும் சிரவணானந்தஞ் செய்து பெருமகிழ்ச்சியினால் தமது மதி முகங்கள் மலர்தல் கண்டு, மேற்சொன்ன பாலிகைகள் நால்வருடன் ரெட்டித்து ஆக எண்மர் கூடி ஸ்ரீ நாமராமாயண பாராயணஞ்செய்து கொண்டு கோலாட்டமாடி திக்கு விஜயஞ் செய்தாற்போல கயிற்றைப் பின்னிய பிறகு "அருளாரமுதே சரணஞ்சரணம்" என்ற கந்தர் சரணப்பத்தும்பாடி, பின்னலைப்பிரித்த குழலிகளின் விளையாட்டயர்ந்ததும் ரவியுஞ் சாய்வான் போலிருந்தமையால் உடனே, இச்சங்கத்து காரியதரிசி ஸ்ரீ மதி-மு. விஜயம்மாள் முதல் வருடத்திய விடயங்கள் அடங்கிய ரிபோர்ட்டு வாசித்து, கூடியிருந்த சுமார் 700 சகோதரிகட்கும் ஒவ்வோர் ரிபோர்ட்டு காபி கொடுத்தார்கள். தாபித்தது முதல் பிரதி சனிக்கிழமைகளில் இந்து பாலிகாபாடசாலையில் சுமார் 50 சகோதரிகள் சேர்ந்து இந்துமதநூலாராய்ச்சியின் பயன் பெறும் ஊக்கத்துடனிருப்பதாக ரிபோர்ட்டினால்தெரியவருவது உண்மையினும் உண்மையென சொல்லத்தகும். ஒவ்வொரு சகோதரிகளும் குறைந்தது நான்கு அணா கொடுத்து வருகிறார்கள். இவாள் பரிபாலித்துவரும் கணக்குச்செம்மையே. இந்தரிபோர்ட்டை சபையார் அங்கீகரித்தவுடன், பிறகுபெங்களூர்பேட்டை ஸ்ரீநிவாசமந்திரத்து சகோதரிகள் சங்கத்தின் காரியதரிசி ஸ்ரீமதி-சிங்கம்மாள் அவர்கள் மேற்படி விஷயங்களை திருப்தியுடன் அநேக திருஷ்டாந்தங்கள் உரைத்து ஆமோதித்தார்கள். அக்கிராசனாதிபதி ஸ்ரீமதி-கமலாபாய் அம்மாள் அவர்களும் அதேவிதம் பல உவமானங்கள் சொல்லி சங்கம் நீடூழி பெருகவேண்டுமென்று கடவுளைத் தியானித்து வருடோற்சவ சம்பவங்களை சரிவர நடத்தினார்கள். சங்கத்து பாலிகைகள் ஒருங்கு கூடி மங்களம் பாட, பலவாத்தியங்கள் முழங்க மஹாதீபாராதனை முதலிய சோடசோபசாரங்கள் சந்நிதானத்தில் நிறைவேறிய பின்பு சபையிலுள்ள சகோதரிகளுக்குரியவாறு விபூதி குங்குமம் புஷ்பம் தாம்பூலம் முதலிய பிரசாதங்கள் கொடுக்கப்பட்டு குதூகலத்துடன் வருடோற்சவ வைபவம் நிறைபெற்றது.

# மிகவும் அருமையான தமிழ் நாவல்கள்.

ஆனந்தமடம்: தேசபக்தி புகட்டும் ஓர் அருமையான நாவல்—இந்த நாவலும் ஸ்ரீ பங்கிம் சந்திரசட்டர்ஜி பங்காளி பாஷையில் எழுதியதை ஸ்ரீ மஹேசகுமாரசர்மா அவர்கள் மொழிபெயர்த்தது. ... 0 8 0

போஜசரித்திரம்—2-ம் பதிப்பு. மனதை கவறக்கூடிய 16-ஆப்டோன் படங்கள் சேர்த்திருக்கிறது. ம-ள-ள-ஸ்ரீ ஹைகோர்ட்டு வக்கீல் T. S. நாராயண சாஸ்திரியார் இயற்றியது—ரொம்பவும் நன்றாய் அச்சிடப்பட்டிருக்கிறது. ... ... 1 8 0

| | | | |
|---|---|---|---|
| மதிகெட்ட மனைவி ... | 1 | 0 | 0 |
| தீனதயாளு ... | 0 | 12 | 0 |
| ஸ்ரீ மாமிகொலுவிருக்கை ... | 0 | 8 | 0 |
| தலையணை மந்திரோபதேசம் 3-ம் பதிப்பு | 0 | 8 | 0 |
| வேணீ ஸம்ஹாரம் ... | 0 | 3 | 0 |
| மிருச்சகடி ... | 0 | 4 | 0 |
| முத்திராராக்ஷஸம் ... | 0 | 4 | 0 |
| லீலாவதி ஸுலோசனை | 0 | 12 | 0 |
| இரண்டு நண்பர்கள் | 0 | 12 | 0 |
| மனோஹரன் | 0 | 12 | 0 |
| கள்வர் தலைவன் | 0 | 8 | 0 |
| சாரங்கதரன் | 0 | 8 | 0 |
| சத்ருஜித் | 0 | 12 | 0 |
| யயாதி | 0 | 8 | 0 |
| வேதாள உலோகம் ... ... | 0 | 8 | 0 |
| அமலாதித்யன் ... ... | 1 | 0 | 0 |
| காதலர் கண்கள் ... ... | 0 | 12 | 0 |

(லீலாவதி ஸுலோசனை முதல் காதலர் கண்கள் வரை: ம-ள-ள-ஸ்ரீ, ஹைகோர்ட் வக்கீல் பி. சம்பந்த முதலியார் இயற்றியவை.)

| | | | |
|---|---|---|---|
| வாஸந்திகா ஒரு தமிழ்நாடகம் ... | 0 | 8 | 0 |
| வெனிஸ்வர்த்தகன் ... ... | 1 | 0 | 0 |
| கற்புகரசி ... ... ... | 0 | 8 | 0 |
| குணமாலிகை அல்லது கற்பின் வன்மை | 0 | 6 | 0 |
| கனகவல்லி ... ... ... | 1 | 0 | 0 |
| கமலினிகலஹம்ஸம் ... ... | 0 | 8 | 0 |
| எலேன் ... ... ... | 0 | 6 | 0 |
| வசீகரி ... ... ... | 1 | 0 | 0 |
| ஞானரஞ்சனி ... ... ... | 0 | 8 | 0 |
| ஸுஜாதா ... ... ... | 0 | 8 | 0 |
| லலிதாங்கி ... ... ... | 0 | 8 | 0 |
| வனஸுதா ... ... | 0 | 8 | 0 |
| லலிதா ... ... ... | 0 | 10 | 0 |
| தமயந்தி .. ... ... | 0 | 9 | 0 |
| ஞானம்பாள் ... ... ... | 0 | 6 | 0 |
| மங்களாம்பாள் ... ... ... | 0 | 8 | 0 |
| கோமளம் காஞ்சியாத்திரை ... ... | 0 | 8 | 0 |
| சுகுணங்கதன் ... ... ... | 0 | 12 | 0 |
| பாவலர் விருந்து ... ... ... | 0 | 8 | 0 |
| வில்லிபுத்தூரார்; பிள்ளை பெருமாள் சரித்திரச் சுருக்கம் ... ... ... | 0 | 8 | 0 |
| மதிவாணன் ... ... ... | 0 | 8 | 0 |
| வால்மீகருமாயணம் கிளைக்கதைகள் ... | 0 | 8 | 0 |
| ஸ்ரீமான். ஜி. சுப்பிரமணிய அய்யர் அவர்கள் ஜீவிய சரிதம் ... ... | 0 | 8 | 0 |
| ஸ்ரீபாலகங்காதரர் ஜீவிய சரிதம் ... | 0 | 3 | 0 |
| அந்தப்புர ரகசியம் ... ... | 1 | 0 | 0 |
| கவிரத்தினசிந்தாமணி என்னும் காளிதாசன்சரித்திரம் ... ... ... | 1 | 0 | 0 |
| மோகனாங்கி ... ... ... | 1 | 4 | 0 |
| குடும்ப ஸம்ரக்ஷணி ... ... | 2 | 0 | 0 |
| மன்மதகாந்தன் கதை ... ... | 0 | 8 | 0 |
| இந்து பாகசாஸ்திரம் ... ... | 2 | 0 | 0 |
| மகாமகம் அதின் மகிமை ... ... | 0 | 4 | 0 |
| ஸ்ரீ தாதாபாய் நௌரோஜியின் ஜீவிய சரிதம் ... ... ... | 0 | 2 | 0 |
| கந்தபுருணச் சுருக்கம் வசனம் ... | 0 | 12 | 0 |
| ரம்யனும் ஜோலியத்தையும் ஆங்கிலேய கவி ஷேக்ஸ்பியர் இயற்றிய ரோமியோ அண்டு ஜூலியட் நாடகத்தின் தமிழ் அமைப்பு (ஓர் புதிய நாடகம்) | 0 | 8 | 0 |

"மானிட மர்ம சாஸ்திரம்" அரிய பெரிய காரியங்க ளொவ்வொன்றையும் விளக்கிக்காட்டும் சித்திரப்படங்கள் 200 அடங்கியது. விலை ரூ. 5. தபாற் சிலவு பிரத்தியேகம் சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு 8 ஷி.

## முத்தி முடிவு மூலமும் உரையும்

இவ்வரிய நூல் வேதாந்த சித்தாந்த சமரச ஞானத்தை யாவரும் இனிதறியுமாறு எளிதாக விளக்குதலானும் அதிதீவிர பரிபக்குவ முடையார்க்கு இன்றியமையாது வேண்டப்படும் சுத்த அனுபவமாகிய முடிந்த நிலையை நன்குணர்த்தலாலும், இது தமிழ் நாட்டில் தத்துவ சாஸ்திர விசாரஞ்செய்வார் எல்லார்க்கும் சாலவும் பயன் படுமெனக் கருதி இதனை அச்சிட்டு வெளியிட்டது. விலை அணா 8.

ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனி

மைலாப்பூர், மதராஸ்.

# விவேக போதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"——திருவள்ளுவர்

தொகுதி 2 } ஸௌம்ய௵ அற்பிசி௴ 1909-௵ அக்டோபர்௴ { பகுதி 4

## ஆத்மா நித்யம்

### THE SOUL IS IMMORTAL

மஹாபாரதம் ஆரண்யபர்வம் முடிவில், தர்மதேவதை, கொக்கு உருக்கொண்ட யக்ஷனாகி, தர்மபுத்திரரை, விஷக்குளக்கரையில் அநேக கேள்விகள் கேட்க அவைகளுக்கு அவர் முறையே தவறாது மறுமொழி கூறிவந்தார். இப்படிக் கேட்டுக்கொண்டு வருகையில், "எது ஆச்சரியமானது?" என்ற கேள்வி பிறக்க; தருமபுத்திரர், "உலகில் ஒவ்வொருநாளும் ஜனங்கள் இறந்துபோய்க்கொண்டே இருக்கின்றனர். உயிரோடிருக்கிற மற்றையவர்கள் இதை இடையறாது பார்த்துக்கொண்டிருந்தும், தாம் மாத்திரம் இறவாதிருக்கவேண்டும் என்ற மாறா ஆவலை உடைத்தாயிருக்கின்றனர். இதுதான் மிகவும் ஆச்சரியமானது," என்று மிகச் சிறந்த அர்த்தங்கள் நிறைந்த மறுமொழியைக் கூறினார்.

இதற்கு வெளிப்படையாக உள்ள அர்த்தத்தையே எல்லோரும் ஸாதாரணமாக எடுத்துரைப்பது. அது பின்வருமாறு, "எல்லோரும் உலகில் இறந்து போய்க்கொண்டே இருக்கிறார்கள். இதை நாம் பார்த்துக்கொண்டே இருக்கிறோம். இப்படி இருந்தும், நமது மனம் உலகப்பற்றால், இவ்வுலகில் நாம் நீடித்திருக்கவேண்டும் என்ற ஆவலை உண்டாக்குகின்றது. இம்மாதிரியான மாறாமூடத்தனத்திற்கு, புத்தி அகங்காரம் ஆகிய ஸூக்ஷ்மக்கருவிகளையுடைய மனிதர், ஆளாகித் தத்தளிப்பதே ஆச்சரியம்" என்று தர்மபுத்திரர் உலகத்தவரது அஞ்ஞானத்தைக்கண்டு வியந்ததாகக்கொண்டு, "இந்த ஆவலும், இதற்குக் காரணமாகிய உலகப்பற்றும் நீங்க 'ஆறிலும்சாவு, நூறிலும் சாவு' என்ற ஸதா ஞாபகத்துடன் இருந்து உயிர் உள்ளமட்டும் நமது கடன்களை பற்றுதலின்றிச் செய்து முடித்து, மனம் குழம்பாதிருப்பதே மனிதன் பின்பற்றி நடக்கக் கூடிய மேலானவழி, இம்மாதிரி ஸதா மரணம், தேக நிலையாமை ஆகிய இவைகளைப்பற்றிய மாறா ஞாபகத்துடன் இருந்தால், தாயுமானவர் பட்டணத்து அடிகள் முதலிய மஹான்கள் அடைந்த மேலான நிலையை நாமும் எளிதில் அடையலாம்" என்று தருமபுத்திரரது வாக்கியத்திற்கு விசேஷ அர்த்தம் சொல்லலாம். இது சிறந்த பொருள்தான், இப்பொருளைப் பின்பற்றுவதால் மனிதனுக்கு மேன்மை உண்டாகும் என்பதற்கு ஐயமில்லை.

இதைவிடச் சிறந்ததாகிய பொருள் வேறொன்று தருமபுத்திரர் மறுமொழியில் அமைந்துகிடக்கின்றது. அது பின்வருமாறு. "அழியாது நீடித்திருக்கவெண்டும் என்ற ஆவல் மனிதனிடம் காணப்படுகின்றது. அநேகர் இறந்து போவதைப்பார்த்துக்கொண்டிருந்த போதிலும், (அப்பொழுதுகூட) இந்த ஆவல் (பொத்துக்கொண்டு, எவ்வளவு அடக்கியும்) அடங்காது கிளம்புகின்றது. இது எக்காலத்தும் மனிதனிடம் மாறாதிருப்பதே மிகுந்த ஆச்சரியம்" என்று தருமபுத்திரர் கூறியதாகக்கொண்டு, 'இது ஸாதாரண ஜனங்கள் அஞ்ஞானத்தால் உலக இன்பங்களை விடாது அனுபவிக்கவேண்டும் என்ற ஆசையால் உண்டாக இடமில்லை. ஏனெனில் அவர்கள் இது அஸாத்யகாரியம் என்பதை ஒவ்வொருவர் இறக்கும்பொழுதும் அறிகிறார்கள். ஆதலால் எப்பொழுதும் (விபரீத ஸமயங்களில் கூட) மாறாத இந்த நித்யத்வ ஆசை, மனிதனிடம் இருக்கும் நித்யவஸ்துவின் சிறப்பால்தான் உண்டாவது. பகவான் ஸ்ருஷ்டியில் ஆத்மா நித்யம் என்பதை எவ்வளவு விசித்திரமாக வெளிவரும்படி செய்திருக்கிறார்!' என்று ஆச்சரிய பரவசமானார் தருமபுத்திரர் எனவிவரிக்கலாம். இது வேதஸம்மதமான விஷயம் என்று நாம் இங்கு எடுத்து விவரிக்க வேண்டியதில்லை.

ஆகவே தருமபுத்திரர் தமது மறுமொழியில் மனிதனிடம் காணப்படும் நித்யத்வ ஆசைக்கு உண்மையான காரணத்தைச் சொல்லாமல் சொல்லி அதைப்பற்றிய ஸாதாரண எண்ணத்தை கண்டித்திருக்கிறார்,

# விவேக போதினி

தொகுதி 2] ஸௌம்ய௵ அற்பிசி௴ [பகுதி 4

## குருசிஷ்ய லக்ஷணம்

### THE VEDIC GURU AND HIS DISCIPLE

எவனொருவன் அநித்யமான உலகவாழ்க்கையில் அழுந்தாமலும் தனது ஆத்மாவின் விருத்தியை மறவாமலும் இருக்கிறானோ அவனே சிறந்த ஞானியாவான். தனது ஆத்மவிருத்தியை நினைத்துக்கொண்டிருப்பது மாத்திரம் போதுமானதன்று. அதற்கு வேண்டிய பிரயத்தனங்களை இடைவிடாது செய்துகொண்டேயிருக்கவேண்டும். இந்த விஷயத்தில் ஒரு த்விஜனுக்கு வேதங்களும் வேதாங்கங்களுமே முக்கிய ஸஹாயங்களாகும். இவைகளிற் கூறிய வழியில் நடந்து மோக்ஷம் அடையவேண்டுமென்பது த்விஜனுக்குக் கடவுளால் ஏற்படுத்தப்பட்ட விதியாகும். அத்விஜர்களுக்கு வேதாத்யயனஞ் செய்ய அதிகாரமில்லாவிடினும் வேதாங்கங்களை நேரே படித்துத் தெரிந்துகொள்ள அதிகாரமுண்டு. ஆனால் வேதாங்கங்களுக்குப் பதிலாக, அவற்றின் அர்த்தங்களைக்கொண்டு மனிதராற் செய்யப்பட்ட நூல்களைக் கற்று வேதரஹஸ்யங்களை அறிந்துகொண்டு மேன்மை அடையலாம். த்விஜனாகட்டும், அத்விஜனாகட்டும், எந்தச் சாஸ்திரத்தைப் படித்து உணரவேண்டுமானாலும் ஸரி, குருவின் ஸஹாயமின்றித் தெரிந்துகொள்ளுதலே முடியாது. ‘தொட்டுக்காட்டாத வித்தை சுட்டுப்போட்டாலும் வராது’ என்றொரு பழமொழி உண்டு. நமது பரதகண்டத்தில் புத்தகங்களில் எடுத்துக்காட்ட முடியாத அநேக அரியவிஷயங்கள் குருபரம்பரைகளில் உபதேசக்கிரமமூலமாகச் சிற்சில மஹான்களிடம் குடிகொண்டிருக்கும். இவர்களையே சாஸ்திரங்கள் குரு அல்லது ஆசாரியன் என்று பெயரிட்டழைக்கும். குருவின் உபதேசமூலமாய்வரும் அநுபவ ஞானமின்றி ஒருவன் எவ்வளவு புத்தகங்களைப் படித்தபோதிலும் அவனுக்கு உண்மை ஞானம் உண்டாகமாட்டாது. ஆகையால் வேதங்களின் உட்பொருளை உள்ளபடி ஒருவன் அறிந்துகொள்ளவேண்டுமானால் அநுபவஞானமுடைய ஆசாரியர்களது ஸஹாயத்தைப்பெற்றே அறியவேண்டும். தகுந்த குருவினது ஸஹாயமின்றி வேதங்களைப் படித்துத் தாறுமாறாகப் பொருள்களைக் கிரஹித்து நரகப்படுகுழிக்கு ஆளாவதைவிட அவைகளைப் படியாதிருப்பதே மேலானது. ஆகையால் வேதங்களின் உண்மைப்பொருளை அறிய வேண்டும் என்ற விருப்பம் ஒருவனுக்கு இருந்தால் அவன் சென்று தகுந்த ஆசாரியனை முதலில் அடைதல்வேண்டும்.

சாஸ்திரங்களில் குருசிஷ்ய லக்ஷணங்கள் நன்றாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. அந்த லக்ஷணங்களில் ஏதாவது ஒன்று ஒரு குருவினிடத்தாவது சிஷ்யனிடத்தாவது இல்லாதிருக்குமாயின், குருவிற்கு வித்தையைக் கொடுக்கவும், சிஷ்யனுக்கு அதைப்பெற்றுக் கொள்ளவும் அதிகாரம் இல்லை என்று நமது சாஸ்திரங்கள் வற்புறுத்துகின்றன. வேதத்தை உபதேசிக்கத் தகுந்த ஆசாரியன். யாவரும் பின்பற்றி நற்கதி அடையத்தக்க ஒழுக்கமும், யாவரிடத்தும் அன்பும், தயையும், உடையவராயும், புண்யம், தர்மம், பக்தி முதலியவைகளுக்கு வாஸஸ்தானமானவராயும் சிறந்த கிருஹஸ்தராயும் இருக்கவேண்டும். அவரிடம் ஸகல வித்தைகளும் குடிகொண்டிருக்க வேண்டும். எவ்விதக் கஷ்டமான ஆக்ஷேபங்கள்வந்தபோதிலும் அவைகளுக்கு வெகு எளிதில் தகுந்தஸமாதானம் சொல்லுவதற்கு வேண்டிய கூர்மையான புத்தியும் அவரிடம் இருக்கவேண்டும் தமது சிஷ்யர்கள் எவ்வளவு மந்தபுத்தியுடையவர்களாயிருந்தபோதிலும், அவர்களுக்கும் மனதில் பதியும்படி கோபமில்லாமல் ஒருதாத்தி

ற்கு அனேகம்தரம் எடுத்துக்காட்டிப்போதிப்பதற்கு வேண்டிய அபாரமான பொறுமையும் ஆசிரியரிடம் இருக்கவேண்டிய முக்கிய குணங்களுள் ஒன்றாகும். சிறந்த குருவானவர் தமது சிஷ்யனைத் தமது பிள்ளையைப்போலப் பாவித்து நடத்திவரவேண்டும். அவர் சிஷ்யர்களுக்குக் கல்வி கற்பிப்பது என்பதைத் தாம் அவசியம் செய்யவேண்டிய ஒரு கடமையாக எண்ணி, அதற்குக் கடவுளது அருள் நோக்கத்தைத் தவிர வேறு கைம்மாறு கருதாமலே இருக்கவேண்டும். எவனொருவன் கல்வியை வியாபாரப்பொருளாகக்கொண்டு பணம் முதலியவைகளுக்காகவே அதனைக் கற்பித்து வருகிறானோ அவனுக்கு நெடுங்காலம் நரகவாஸம் நேரிடும் என்று நமது சாஸ்திரங்கள் கூறுகின்றன. குரு ஒருநாளும் தமது சிஷ்யனை அடிக்கக்கூடாது. அவனுக்கு வேறு உபத்திரவங்களைச் செய்வதும்கூடாது. அவ்வாறு செய்யும்படி ஏதாவது காலங்கள் வருமாயின், சிஷ்யனது முரட்டுத்தனத்தையும், அறியாமையையும் குருவானவர் அன்போடு தமது தந்திரத்தால் மாற்றி அவனை நல்லவழிக்குக் கொண்டுவரவேண்டும். குரு நடந்துகொள்ள வேண்டிய மாதிரியைப்பற்றி, சிக்ஷையில் பின்வருமாறு உருவகப்படுத்திச் சொல்லப்பட்டிருக்கிறது.

“ஞானம் என்பவள் ஒரு பிராம்மணனிடம் வந்து, (1) ஓ பிராம்மணா, என்னைக் காப்பாற்று, நான் உனக்கு ஒரு சிறந்த ஐசுவரியமாயிருப்பேன். என்னைக் கர்வம், அஸத்யம், சிற்றின்பங்களில் உழலும்தன்மை ஆகிய இவைகளில் ஏதாவது ஒன்றையுடையவருக்கு எடுத்துக்கொடுத்துவிடாதே. அப்படியானால் நான் வலிமை குறையாது உன்னிடம், இருப்பேன். (2) எவன் ஒருவன் சிஷ்யர்களது காதில் ஹிம்ஸைக்குக் காரணமாகாமல் உண்மையை உபதேசிக்குங்கால் அத்துடன் அமிருதத்தையும் சேர்த்துக்கொள்ளுகிறானோ, அவனே சிஷ்யனுக்குத் தாயார் தகப்பனார் ஸ்தானத்திலிருப்பவன். அவனுக்கு ஒரு விதத்திலும் மனங்கோணாதபடி சிஷ்யன் நடந்துகொள்ளவேண்டும். (3) எந்த சிஷ்யன் ஒரு குருவினிடமிருந்து கல்வி கற்றுவிட்டு அந்தக் குருவை மனம் வாக்கு காயம் என்னும் திரிகரணங்களாலும் கௌரவப்படுத்தாது இருக்கிறானோ, அவன் குருவினது கிருபைக்குப் பாத்திரனாகான். ஆதலால் அந்தக் குருவினிடத்திலிருந்துவந்த ஞானமும் அவனை ரக்ஷிக்கமாட்டாது. (4) ஆனால் உனக்கு ஒருவன் சுத்தன் என்றும், கேட்கவேண்டும் என்ற ஆவலுடையவன் என்றும், கூரிய புத்தியுடையவனென்றும், பிர்ம்மசாரி என்றும், உனக்கு ஒருநாளும் கெடுதலை விரும்பாதவன் என்றும், தெரிந்தால் பிராம்மணா, அவனிடம் என்னை ஒப்பிவித்துவிடு, உனது ஐசுவரியமாகிய என்னை அவன் நன்றாக ரக்ஷித்துவருவான்’ என்று சொன்னாள்.”

முன் எடுத்து காட்டப்பட்டுள்ள நான்கு சுலோகங்களில் சிக்ஷையானது குரு சிஷ்யர்களது லக்ஷணத்தை உருவகப் படுத்திச் சொல்லிற்று. இதற்கு ஸாயனர் பின்வருமாறு வியாக்யானம் எழுதுகின்றார். ஞானத்திற்கு அதிஷ்டானமான தேவியானவள் பிராம்மணனாகிய ஆசாரியனிடம் சென்று வேதரஹஸ்யங்களை அதிகாரிகளிடம் கொடுக்காமல் தன்னைக்காப்பாற்றவேண்டும் என்று சொல்லுவதாக முதற் சுலோகத்தில் வருணிக்கப்பட்டிருக்கிறது. தன்னை அடைந்திருக்கும் எல்லோருக்கும் ஸகலரும் விரும்பத்தக்க மேலான பதவியைக்கொடுக்கும் சக்தி தன்னிடம்இருப்பதால், அவள் தன்னை பிராம்மணராகிய குருவினது ஐசுவரியம் என்று சொல்லிக்கொண்டாள். அவளே வேறோரிடத்தில் ‘என்னையாவது என்னை எடுத்தாண்டு உபதேசிக்கத் தகுந்த உன்னையாவது எவனொருவன் அவமதிக்கிறானோ, கற்றதின்படி எவனொருவன் ஒழுங்காக நடக்கவில்லையோ, எவன் தனது தேகத்தை படிப்பதற்கு முன் ஸ்நானம், வாய் கொப்பளித்தல் முதலிய

ஆசார விசேஷங்களால் சுத்தி செய்து கொள்ளும் திறனற்றவனா யிருக்கிறானோ அவனைப் போன்ற போலி சிஷ்யர்களுக்கு என்னைக் கொடுத்துவிடக் கூடாது. அப்படியாயின் நான் உன்னிடம் நிலைத்திருந்து பலனைக்கொடுப்பேன்' என்று சொல்லுகிறாள்.

முதல் சுலோகத்தில் சிக்ஷையானது ஒரு நிஷேத வாக்யத்தைச் சொல்லிவிட்டு இரண்டாவது சுலோகத்தில் ஆசாரியன் சிஷ்யனது காதுகளை உண்மையால் (வேதத்தால்) நிறைக்கவேண்டும் என்று சொல்லுகிறது. இவ்வாறு செய்யுங்கால் சிஷ்யனுக்கு ஒருவிதக் கஷ்டமும் தோன்றாதிருக்கவேண்டும். ஒரு சிஷ்யன் ஒருநாளில் முழுச்சுலோகமாவது அல்லது அரைச்சுலோகமாவது கற்றுக்கொள்ளத் திறனற்றவனா யிருப்பானேயானால், அவனுக்குக் கஷ்டம் தோன்றாதிருப்பதற்காக, குரு அவனை, கால் அல்லது அரைக்காற் சுலோகமாகத் தினம் படிக்கும்படி செய்யவேண்டும். குரு, வேதவாக்யங்களைச் சிஷ்யனுக்குப் போதித்து வருங்கால் அவைகளுடன் அமிர்தத்தைச் சேர்த்துக்கொள்ளவேண்டும், அதாவது சிஷ்யனுக்கு குருவேதார்த்தத்தையும் கூடவே போதித்து வரவேண்டும். இவ்வாறு செய்வதால் குரு தமது சிஷ்யனை ஒரு தேவதைக்கு ஸமானமாக்குகிறார். அதாவது அவனை மோக்ஷத்தை அடையத்தக்கவனாகச் செய்கிறார். இவ்வாறு நன்மை பயக்கும் குருவை, சிஷ்யன் தாயாகவும் தகப்பனாகவும் எண்ணி அவசியம் மரியாதை செய்யவேண்டும். இவனது தாய் தகப்பன்மார்கள் இவனுக்குத் தேகத்தைக்கொடுத்து உதவியபோதிலும் குருவானவர் ஞானத்தை ஊட்டி மோக்ஷமடைவதற்கு வேண்டிய பேருதவி புரிதலால் அவரே சிஷ்யனுக்கு உண்மையில் தாயார் தகப்பனாரிலும் சிறந்தவராவார். இந்த நிலையில் இருக்குங் குருவுக்கு, சிஷ்யன் கனவிலும் கேடுநினைத்தல் கூடாது.

மந்தபுத்தியை உடையவனை அனதிகாரி என்று நமது சாஸ்திரங்கள் கூறவில்லை, ஆனால் அவைகள் சிலக்குறைவு உடையவனை அனதிகாரி என்று வற்புறுத்துகின்றன. குருசிஷ்ய லக்ஷணங்களை விஸ்தரிக்கும் சாஸ்திரங்களிலும், முன்னெடுத்துக் காட்டப்பட்ட சிக்ஷையிலும் இந்தவிஷயம் உறுதியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மூன்றாவது சுலோகம் கற்கவேண்டியவைகளை எல்லாம் கற்றபின்பு எந்தப் பிராம்மணன் ஒருவன் தனது குருவை நல்லவார்த்தைகள் மூலமாகக் கௌரவப்படுத்தாமலும், குருவினது நன்மையை மனத்தால் எண்ணாமலும், அவரிட்ட ஆஞ்ஞைப்படி நடக்காமலும் இருக்கிறானோ, அவன் தோற்ற மாத்திரத்தில் சிஷ்யனே ஒழிய வேறல்ல. அவன் குருமூலமாக வேதரகஸியங்களை அடைந்து உய்யத் தகுந்தவன் அல்லன். அவன் குருகிருபைக்குத் தகுந்த பாத்திரனல்லன். இவ்வாறு தகுந்தபாத்திரமல்லாதவனா யிருப்பதால், குரு அவன் விஷயத்தில் கருணை உடையவராயிருக்கமாட்டார். குருவே இவ்வாறு இவன் விஷயத்தில் அதிருப்தியோடிருந்தால் அவரால் அந்தச் சிஷ்யன் அடைந்த வித்தை மாத்திரம் எவ்வாறு பயனுள்ளதாகும்? இதனால்தான் வித்தையின் அதிஷ்டான தேவியானவள், 'நான் ஞானஸ்வரூபமானவள், வேதங்களே எனது இருப்பிடம், எனது மேன்மையை தேவர்களாலும் அளவிட்டு அறியமுடியாது. என்னைப் பெறுதற்குத்தகுந்த அதிகாரமில்லாதவரிடம் யோசிக்காது என்னை எறிந்துவிடாதே, ஏனெனில் விலையுயர்ந்த என்னை அவரால் வைத்துக் காப்பற்றமுடியாது. உனக்கு சுத்தனென்றும், கேட்டறியவேண்டும் என்ற ஆவலுடையவன் என்றும், கூரியபுத்தியுள்ளவனென்றும், பிரம்மசரியம் உடையவன் என்றும், உனக்கு ஒரு பொழுதும் கேட்டை எண்ணாதவன் என்றும் எவன் தோன்றுகிறானோ அந்தச் சிஷ்யனுக்கே என்னைக்கொடு. இம்மாதிரியான சிஷ்யனே என்னை ஸரிவரப் பாதுகாப்பான்' என விண்ணப்பம் செய்வதாக, சிக்ஷையிற் சொல்லப்பட்டிருக்கிறது.

# நமது நோன்புகள்
## OUR OBSERVANCES



### III. நவராத்திரி
### NAVARATRI

நவராத்ரி என்ற பதம் ஒன்பது இரவு எனப் பொருள்படும். இது புரட்டாசிமீ அமாவாசைக்கு பின்னர் உள்ள நவமியை இறுதியாக உடைய ஒன்பது நாட்கள் இரவிலும் கொண்டாடப்படும் ஓர் திவ்ய உத்ஸவம். இது சில வருஷங்களில் அற்பிசி மாஸத்துள்ளும் போகும். இந்நாட்களின் ஆரம்பத்தில் எல்லோர் வீட்டிலும் தத்தம் நிலைக்கேற்ப பதுமைகள் படங்கள் முதலியவைகளை ஒழுங்காக வைத்து மத்தியில் பரம்பொருள் உருவமாகிய ராமன், கிருஷ்ணன், பரமசிவன், முதலிய கடவுள்களது ரூபமான பதுமைகளை வைத்து, ஒவ்வொரு ஸாயங்காலமும் ஒன்பது நாள்வரையில் பாட்டு முதலியவைகள் பாடி ஆலத்தி முதலியவைகளைச் சுற்றி மங்களகரமாக இந்த உத்ஸவத்தை பெண்டுகள் கொண்டாடுவது வழக்கம். இந்த ஒன்பது நாளும் பெண்டுகள் தம்முள் ஒவ்வொருவர் வீட்டிற்குச்சென்று வெற்றிலை பாக்கு முதலிய மங்களத்திரவ்யங்களை அடைந்து தமது வீடு வருவது வழக்கம்.

இதைப் பெண்டுகள் மாத்திரம் சிறப்பாக இவ்வாறு கொண்டாடுகிறார்கள் என்று எண்ணிவிடக்கூடாது. புருஷர்களும் இதில் சேருவதுண்டு. அவர்கள் முற்கூறிய கொலுமுதலியவைகளை கவனியாமல் விட்டபோதிலும் அவர்களுக்கு ஏற்றபடி நவராத்திரியைக் கொண்டாடுகிறார்கள். வேதபாராயணம், ஸூர்ய நமஸ்காரம் முதலியவைகளை நடத்த பிராம்மணர்களை ஏற்படுத்தி இந்த ஒன்பது நாளில் தமதுவீடு வேதகோஷத்தால்நிறைந்து மங்களகரமாகும்படி செய்கிறார்கள். அதிகபக்தியுடைய சில புருஷர்கள் நவராத்திரி காலத்தில் ஸுந்தரகாண்ட பாராயணம் செய்து முடிப்பது வழக்கம். மேலும் நவராத்திரியில் கடைசி நாளாகிய மஹாநவமி தினத்தில் புருஷர்கள் தமது வீட்டிலிருக்கும் சாஸ்திரபுஸ்தகங்கள் எல்லாவற்றையும் கொலுவண்டை ஒழுங்காக அடுக்கிவைத்து மிகுந்தசிரத்தையோடு காலைமுதல் உபவாஸம் இருந்து ஸரஸ்வதியைப் பூஜை செய்வது வழக்கம். வீட்டில் உள்ள குழந்தைகள் உள்பட எல்லோரும் இப்பூஜை முடிந்ததும் புஸ்தக ரூபமாகிய ஸரஸ்வதி மேல் மலர்களைத் தூவி நமஸ்கரித்துவிட்டுப் பின்பு தான் போஜனம் செய்வார்கள். இந்த மஹாநவமி அன்றையதினமாவது அல்லது அடுத்த தினத்திலாவது தொழிலாளிகள் தமக்கு ஸரஸ்வதிக்கு ஸமமாக இருக்கும் ஆயுதங்களை வைத்துப் பூஜை செய்வார்கள். ஆதலால் இந்தப்பூஜைக்கு ஆயுதபூஜை யென்றொரு பெயரும் உண்டு. இந்தப் பூஜை பரதகண்டத்தில் வஸிக்கும் ஸகல ஜாதியாருக்குப்

பொதுவானது. பெண்டுகள், புருஷர்கள் எல்லோருக்கும் முக்கியமானது. இதுமாத்திரமல்ல. இந்த நவராத்திரியை ஸ்மார்த்த வைஷ்ணவ மாத்வாள் எல்லோரும் ஒரே உத்ஸாஹத்தோடு கொண்டாடுகின்றார்கள். சிவ விஷ்ணு ஆலயங்களிலும் இதுஒரு உத்ஸவமாகக் கொண்டாடப் படுகின்றது. அங்கு அம்பிகையை கொலுமத்தியில் அலங்கரித்துவைத்து பார்ப்போர் எல்லோரது கண்களும்குளிர தீப ஆராதனை முதலியவைகள் இந்த ஒன்பது இரவும்ஒழுங்காக நடந்துவரும். இவ்வாறு பெண்டுகள் புருஷர்கள் எந்த ஜாதியாரானாலும் ஸரி, எந்த பிராயத்தவராயினும் ஸரி, எந்தமதத்தைச் சேர்ந்தவராயினும் ஸரி எல்லோருக்கும் மனோரம்யமாக விளங்குவது இந்த நவராத்திரி உத்ஸவம்.

இதை முற் குறித்தவாறு கொண்டாடக் காரணம் என்ன? இது த்ரிமதஸ்தர்களுக்கு பொதுவாக இருப்பானேன்? இந்த உத்ஸவத்திற்கு தக்க புராணகதைகள் த்ரிமதஸ்தர்களுக்கும் இருப்பதால் இது இவ்வாறு பொது உத்ஸவமாக இருக்கின்றது. அவற்றுள் சிவஸம்பந்தமான கதை பின்வருமாறு. முன்னொருகாலத்தில் மஹிஷாஸுரன் என்ற எருதுரூபமுடைய ஒரு அஸுரனும் அவனது பரிவாரங்களும் விருத்தியாகி வரபலத்தால் சிறந்த பதவியையடைந்து உலகை இராவணாதி கொடியவர்கள் போல்வருத்தத் தொடங்கினர். இந்தக்கஷ்டம் பொறுக்கமுடியாமல் தேவதைவள் பார்வதியிடம் விண்ணப்பம் செய்துகொள்ள, அவள் அவர்களுக்கு அபயப் பிரதானம்செய்து அனுப்பிவிட்டாள். பின்புதான்வாக்குக் கொடுத்தவாறு செய்துமுடிக்க அவள் ஒன்பது நாள் சிவபிரானைக்குறித்துத் தவமிருந்து அவரிடமிருந்து தகுந்த சக்திபெற்று ஒன்பதாம் நாள் மஹிஷாஸுரனைக்கொன்று அவன் பரிவாரங்களை வேரறுத்து சாந்தமானாளாம். இந்த மஹிஷாஸுரனைக்கொல்லும் அவஸரத்தில் பார்வதீ தேவிக்கு மஹிஷாஸுரமர்தனி என்றுபெயர். இக்கதையை முன்னிட்டுக்கொண்டு ஸ்மார்த்தர்கள் அம்மன் தவமிருந்த காலத்தைச் சிறந்ததாக வருஷாவருஷம் கொண்டாடிவருகிறார்கள். பெண்டுகளுக்கு தவமிருக்கும் அம்மன் ஒன்பதாம்நாள் விழிக்கும் தருணத்தை கொலு, பாடல்கள் முதலிய மங்கள விஷயங்களை வைத்துக்கொண்டு எதிர்பார்க்கிறோம் என்பதே எண்ணம். அம்மன் விழித்து ஒன்பதாம்நாள் தமக்குவேண்டிய மனோபீஷ்டங்களைக் கொடுப்பாள் என்பதே அவர்கள் துணிபு. இம்மாதிரி செய்வதில் குழந்தைகளும் கூடி ஆனந்திக்க தருணம் வாய்க்கின்றது. புருஷர்களுக்கோ உட்கருத்து முக்கியம். ஸாதாரண ஜனங்களுக்கு வேதபாராயணம் ஸுந்தரகாண்ட பாராயணம் முதலியவைகளால் இஹலோகஸுகம் ஸித்திக்கவேண்டும் என்ற எண்ணம் இருக்கலாம். அதைச் சிறப்பாக இங்கு நாம் கூறவரவில்லை. ஆனால் மஹிஷாஸுரன் அவன் பரிவாரங்கள் முதலியவைகளை அஞ்ஞானமும் அதன் காரியங்களுமாகக் கொண்டு பார்வதியை சித்சக்தியாகக்கொண்டு அது பரம்பொருளாகிய ஆத்மஸாக்ஷாத்கார விசேஷத்தால் அஞ்ஞானத்தை வேரறுப்பதாகக் கொள்ளலாம். அந்த திவ்ய ஸமயத்தில் வேதாதிகள் மனதைச் சீர்திருத்த ஓதுவது நியாயமே, ஏனெனில் வேதங்களின் உட்கருத்து இதுவாதலால். இந்த ரகஸியத்தினால் தான் இதை முக்கியமாகப் பெரியோரும் கொண்டாடுவது. ஒன்பதாம் நாள் மஹிஷாஸுரமர்த்தனி தர்சனம் அதி விசேஷம் என்பது இப்பொழுது எடுத்துக்கூறிய ரஹஸ்யத்தால் நன்கு விளங்கும்.

வைஷ்ணவ மாத்வர்களுக்கு இந்நவராத்திரி
முக்கியமாயிரு காரணமாக இருக்கும் புரா
ணகதை பின் வருமாறு. முன்னொருகாலத்
தில் லக்ஷ்மிதேவி உலகில் அலமேலு மங்கை
யாக வந்து பரமபதவாஸியாகிய விஷ்ணுவாம்
திருப்பதி ஸ்ரீநிவாஸப் பெருமாளை அடைந்து
ஆனந்திக்க இந்த ஒன்பதுநாள் தவமிருந்தாள்.
இதன் முடிவில் அவள் எண்ணம் முற்றுப்
பெற விவாஹம் வெகு கோலாஹலமாக நடந்
தது. இந்த விசேஷத்தை முன்னிட்டு வைஷ்
ணவமாத்வர்கள் இந்நாட்களை சிறப்பாகக்கொ
ண்டாடுவது. இந்நாட்களில் திருப்பதியில் பிரம்
மோத்ஸவம் நடக்கிறது. அம்மன் தவமிருக்
குங்கால், முன்பு ஸ்மார்த்தர்கள் விஷயத்தில்
சொன்ன காரணத்திற்காகவே, வைஷ்ணவமாத்
வப் பெண்டுகளும் கொலு முதலியவைகள்
வைப்பது வழக்கம்.

முற்கூறிய காரணங்களால் இந்நவராத்திரி
த்ரிமதஸ்தர்களுக்கு பொது என்பது விளங்க
லாம். ஸகல ஜாதியார்களுக்கும் இது பொது
வாக விளங்குவானேன்? இதற்குக் காரணம்
பிரம்மாவின் பத்னியாயும் ஸகல வித்தைகளு
க்கு தேவியாயும் இருக்கும் ஸரஸ்வதி தேவி
யும் இந்நவராத்திரியில் தன் கணவனை அடை
ந்து நிலைபெறத் தவம்செய்தனளாம். இது கார
ணம்பற்றி இந்நாட்களில் கடைசி மூன்றுநாட்
கள் ஸரஸ்வதிக்கு முக்கியமானவை. ஆகவே
படிப்பிற்கு நிலயமாகிய புத்தகங்களும், தொழி
லாளிகளுக்கு படிப்புக்கு ஸமமான தொழிலை
நடத்த ஸஹாயம்செய்யும் கருவிகளும் ஸரஸ்வ
தியின் ரூபாந்தரமாகக்கொண்டு மஹாநவமியன்
று பூஜை நடந்துவருகின்றது. இந்நவராத்ரிக்கு
ஸரஸ்வதிஸம்பந்தம் ஏற்பட்டதால் இது எல்லா
ஜாதியாருக்கும் பொதுவாயிற்று. எல்லோரும்
மஹா நவமியைக் கொண்டாடும்படி வந்தது.
பத்தாம்நாள் விஜயதசமியன்று ஸரஸ்வதி தவம்
முடிந்து ஸந்துஷ்டியாய் இருப்பதால் அன்று
வாசிப்போருக்கு கல்வி நன்றாகவரும், தொ
ழில் செய்பவருக்கு காரியங்கள் கைகூடி வரு
மாம். ஆகையால் விஜய தசமியன்று குழந்
தைகளை நாள் நட்சத்திரம் நோக்காது படிக்க
வைப்பது (படிக்க ஆரம்பிக்கும்படி செய்வது)
நம்முள் வழக்கமாகிவிட்டது. முற்கூறிய
ரகஸ்யார்த்தத்தை ஒட்டி நோக்கில் அஞ்ஞா
னம் நீங்க ஞானம் விருத்தியாவதை ஸரஸ்
வதி பூஜை விஜயதசமி இரண்டும் குறிப்பிக்க
லாம் என்று தோன்றும்.

மேலும் விஜயதசமியன்று உட்கருத்துக் கள
ஞ்சியமாகிய சிவன் கோயிலில் பரிவேட்டை
உத்ஸவம் ஒன்று நடக்கும். அன்று பகவான்
எழுந்தருளி சமீ அதாவது வன்னிமரத்தில் அம்
புபோடுவது வழக்கமாக இருக்கின்றது. வன்னி
மரத்தில் நெருப்பிருக்கிறது என்பது எல்லோ
ரும் கேள்விப்பட்ட விஷயமே. அதாவது அது
லேசாக உரைப்பட்டபோதிலும் அதில்நெருப்பு
ண்டாகும் என்பதே. அதில் அம்பு பாய்ச்சினால்
அந்த வேகத்தால் நெருப்பு உண்டாகி அந்தமர
த்தை எரித்துவிடும்என்பதே. ஆதலால்அந்தவன்
னிமரம் வேட்டையாடுவோருக்கு எளிதில் ஜய
த்தைக்கொடுப்பது. ஆதலால் இந்த வேட்டை
தினத்திற்கு விஜயதசமி அதாவது ஜயத்தைக்
கொடுக்கும் வன்னிமரத்தை எரிக்கும் நாள்
என்று பெயர். விஜயதசமி என்ற பதம் இப்
பொருள் கொடுத்தலையும் காண்க. இந்தப் பரி
வேட்டை உத்ஸவத்தின் உட்கருத்தே மிக
முக்கியமானது. நெருப்படக்கிய வன்னிமரத்
தையே ஆத்மாவோடு கூடிய தேகமாகவும்,
பகவானை ஸத்குருவாகவும், அம்பை ஞான
மாகவும், வேட்டையில் அம்பு விடுவதை ஞா
னோபதேசமாகவும், மரம் எரிந்து விழுவதை
கர்மஸம்பந்தமானவைகளை 'ஞானத்தழல் சுட்
டுவெண்ணீறு'க்குவதாகவும் கொள்ளலாம். இந்
தக் கருத்தால் தான் விஜயதசமியே நாள்
முதலியவை நோக்காது அஞ்ஞானத்தை எரி
த்து மேன்மையை விளைவிக்கும் வித்யாப்யா
சம் தொடங்குவதற்கு நல்ல தினம் என்று நம்

மவரால் மதிக்கப்பட்டு கொண்டாடப்பட்டு வருகிறது.

இவைகளால் ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகிய இவர்கள் தபஸ்ஸுசெய்து தமது கார்யஸித்தி அடைந்த நாள்கள் இவை என்பது நன்றாகத் தெரியவரும். முக்கியமாக வைஷ்ணவர்கள் மாத்திரம் அவர்கள் தமது துவேஷபுத்தியால் துர்கை ஸரஸ்வதி ஆகிய இவர்களைக் கவனியாது விட்டு விடலாம். 'தெய்வமிகமேல்' என்ற கொள்கையைப் பின்பற்றி நடக்கும் மூர்த்தித் துவேஷமற்ற அத்வைத ஸித்தாந்தம் மேன்மை எனக் கொண்ட ஸ்மார்த்தர்கள் எல்லோரும் நவராத்திரியின் சிறப்பு நன்கு விளங்க ஸரஸ்வதி பூஜையன்று துர்கா லக்ஷ்மீ ஸரஸ்வதீப்யோநம: என்றுகூறிப் பூஜைதொடங்குவது வழக்கம். இதில் ஒவ்வொரு பாகத்தின் சிறப்பையும் முன்னர் எடுத்து விஸ்தரித்தாய்விட்டது.

ஸ்காந்தத்தில் இந்நவராத்திரி பூஜையின் ஆரம்பமும் சிறப்பும் ஒரு கதை மூலமாகக் கூறப்பட்டிருக்கிறது. கிருதயுகத்தில் ஸுகேது என்றொரு அரசன் இருந்தான். அவனுக்கு ஸுவேதி என்றொரு மனைவி இருந்தாள். அவ்வரசன் குடிகளின் ஸுகத்தையே கருதி மனுநெறி வழுவாது அரசாட்சிசெய்து வரும்நாளில், அவன் தாயாதிகளது கஷ்டத்தால் அவர்கள்மேல் படை எடுத்துச் சென்று தோல்வி அடைந்து ராஜ்யம் இழந்து அவன் தன் மனைவியோடு காடுகளில் திரியும்படி நேரிட்டது. அன்ன ஆகாரமின்றிக் காட்டில் அலைந்துவருகையில் களைப்பு மிகுதியாலும் போரில்பட்ட காயங்களாலும் அவனுக்கு நோய் கண்டது. அப்பொழுது ஒருவாறு நல்ல ஸ்திதியிலிருந்த ஸுவேதி தன் கணவனைத் தோளில் சாத்தித் தூக்கிக்கொண்டு காட்டைவிட்டு வெளிவர யத்தனித்தாள், அங்கு பஞ்சவடி ஸ்நாநத்திற்காக வந்த அங்கிரஸ் என்ற ரிஷி அவள்முன் தோன்ற அவர் வேண்டுகோளின்படி தனது சரித்திரத்தை ஒளிக்காது அவரிடம் சொல்லி துக்கித்தாள். ரிஷிக்கு மனமிரங்க அவர் அவர்களை பஞ்சவடிக்குத் தீர்த்த யாத்திரையாகக் கூட்டிக்கொண்டுபோய் அங்கு கோயில்கொண்டெழுந்தருளி இருக்கும் துர்கா லக்ஷ்மி ஸரஸ்வதிகளை அவர்கள் தவம் செய்து ஸித்திபெற்ற நவராத்ரிகாலத்தில் ஆராதிக்கக் கட்டளையிட்டு, வேண்டிய ஸஹாயங்களையும் செய்தார். ரிஷி கூறியபடி மிகுந்த பக்தியோடு ஸுவேதி துர்கை முதலியோரை ஆராதிக்க ஸுகேதுவுக்கு நோய் நீங்கிற்று. பின்பு அவளுக்கு அங்கு ஒரு புத்திரன் உண்டானான். அவனுக்கு அங்கிரஸ் ஸூர்ய பிரதாபன் எனப் பெயரிட்டார். காலக்கிரமத்தில் அந்தப்பிள்ளை பலவானாகி தன் விரோதிகளை முறியடித்துத் தன் தகப்பனுக்கு ராஜ்யத்தை மீட்டுக்கொடுத்தான். அன்றுமுதல் எல்லோரும் நவராத்திரிகாலத்தில் அம்பிகையைப் பூஜைசெய்தால் தமக்கும் ஸுவேதிக்கு உண்டானதுபோல மேன்மை உண்டாகும் என்ற நம்பிக்கையோடு இந்த உத்ஸவத்தைக் கொண்டாடி வருகிறார்கள்.

இந்த நவராத்திரி ஒன்பது தினங்களுள் முதல் மூன்றுநாள் துர்க்கையையும், இரண்டாம் மூன்றுநாள் லக்ஷ்மியையும், கடைசி மூன்றுநாள் ஸரஸ்வதியையும் ஆராதிப்பதே சிறந்தமுறை. இவ்வாறுசெய்யச் சக்தியற்றவர்கள் மஹாநவமி யன்றையதினமாவது துர்க்கைக்கு உரிய ஆயுதங்கள், லக்ஷ்மிக்குரிய இரத்னங்கள், ஸரஸ்வதிக்குரிய புஸ்தகங்கள், இவைகளையாவது பூஜித்தல்வேண்டும். மேலும் இந்நவராத்திரிகாலத்தில் இராமாயண பாரத பாகவதம் முதலிய திவ்ய கதைகளைப் படிக்கத்தெரிந்தவர் ஒவ்வொருவரும் பாராயணம் செய்து ஸத்காலக்ஷேபம் செய்வது மிகவும் அவசியம். இம்மாதிரி பெரியோர்களால் நமது நன்மைக்கு ஏற்படுத்தப்பட்ட விருதங்களை சிரத்தையுடன் அனுஷ்டித்தால் நமக்கு சித்தசுத்தி உண்டாக நாம் முடிவில் பரமபதம் அடைய யோக்கியர்களாவோம் என்பதற்கு என்ன ஸந்தேகம்?

# கோபாலன் விரதம் நிறைவேற்றினது

## GOPALAN FULFILS HIS VOW

சிதம்பரத்து ராஜு சாஸ்திரியார் குமாரன் கோபாலன் பட்டணத்தில் இங்கிலீசு படித்துக் கொண்டிருந்தான். அவன் தன் எண்ணத்திற்கு மாறாக இங்கிலீசு படித்தான். இங்கிலீசு படிப்பதால் நன்மையுண்டென்று அவன் எண்ணவில்லை. இந்தியாதேசத்திற்கு வந்துள்ள கேடுகளெல்லாம் இங்கிலீசுப்படிப்பினாலென்பது அவன் கொள்கை. "ஆரியர்களுடைய ஒழுக்கவழக்கங்கள் நாளுக்குநாள் குன்றிவிட்டன; கெட்டவழக்கங்கள் வளர்ச்சியடைகின்றன; கழிந்துபோன இனிய பழைய நாட்களை மீட்பதற்கு வழியில்லை" என்பதுதான் கோபாலன் இடைவிடாது செய்யும் முறையீடு. அவனுடைய பெற்றாரும் சுற்றத்தாரும் இங்கிலீசு படிக்கும்படி அவனை நெருக்கினார்கள்; இல்லையாயின் அவன் திருவையாற்றிலுள்ள சமஸ்கிருத பாடசாலையிலாதல் மற்றொன்றிலாதல் சேர்ந்து வேதமோதியிருப்பான். இங்கிலீசு படிக்கும்படி நேரிட்டிருந்த போதினும், அவனது சொற்செயல்கள் அவன் கொள்கைக்கு மாறாக இருக்கவில்லை.

கோபாலன் சென்னபட்டணத்தில் ஒரு விடுதி வீட்டிலிருந்து படித்துக்கொண்டிருந்தான். கிறிஸ்து பிறந்தநாளின் விடுதலை வந்தது. அவன் புதுத்துணி முதலிய சிலபொருள்கள் வாங்கி மூட்டைகட்டிக்கொண்டு ஊருக்குப் புறப்பட்டான்.

அவன் போனபோது சிதம்பரத்திலே திருவாதிரை உற்சவம். அவனுடைய தாயார் கைம்பெண்டாட்டி; திருவாதிரையலன்று அவள் விடியற்காலையிலெழுந்து நடராசர் தரிசனத்திற்காகத் தீர்த்தமாடச்சென்றாள். பக்கத்துக் கிராமங்களிலிருந்து பெண்கள் பலர் வந்து சிவகங்கைப்படி நாற்புறத்திலும் சூழ்ந்திருந்தார்கள். கோபாலனுடைய தாயார் ஸ்நானஞ்செய்து படியேறும்போது நடேச சாஸ்திரியாரின் மனைவியைக்கண்டாள். அவள் இவளுக்குக் குழந்தைப் பருவந்தொடுத்துச் சிநேகம்.

ஒருவரை ஒருவர் பார்த்துச் சந்தோஷமடைந்து இருவரும் முறைப்படி க்ஷேமம் விசாரித்தபின், நடேச சாஸ்திரியாரின் மனைவி "கோபாலன் வீட்டிலிருக்கிறானா"? என்றுகேட்டாள்.

"வந்திருக்கிறான்; விடுதலை நாள் ஒழிந்து விட்டது; பட்டணம் போகப் போகிறான்" என்றாள் கோபாலனுடைய தாய்.

நடேசசாஸ்திரியாருக்கு ஓரழகிய சிறு பெண்ணிருந்தாள்; அவளுக்கு அப்போது வயது பன்னிரண்டாகிவிட்டது; கல்யாணமாகவில்லை. அவள் பெயர் கமலாம்பாள்.

"எனது கமலத்தை உன்மகன் கோபாலனுக்குக் கல்யாணம் செய்துவைத்தால் நன்றாயிராதா?" என்றாள் நடேசசாஸ்திரியாரின் பாரி.

"அதுதான் எனக்கும் நெடுநாளாக எண்ணம்; என்மகனுக்குக் கல்யாணம் செய்துகொள்ள இஷ்டமில்லை. நான் என்ன செய்வேன்! நான் எத்தனை முறை அவனுக்குக் கல்யாணம் பேசினேன்! ஒருமுறையும் அது கைகூடிவரவில்லை" என்று கூறினாள் கைம்பெண்டாட்டி.

"ஆனாலென்ன, இன்னுமொருமுறைகேட்டுப் பார். உன்பிள்ளைக்கு வயதாகிவிட்டது; அவன் கல்யாணம் செய்துகொள்வானானால் உன்மனத்திற்குச் சந்தோஷமாயிருக்கும். ஏன் அவன் கல்யாணம் செய்து கொள்வதில்லை என்கிறான்?"

"நான்கேட்டுப்பார்க்கிறேன்; அவன் உடன்பட்டால் இந்தத் தைமாசத்திலேயே முகூர்த்தம் வைத்துக்கொள்ளலாம்."

தரிசனம்முடிந்து கோபாலனுடைய தாய் வீட்டிற்குப் போனபோது அவன் இடைகழியிலிருந்து பத்திரிகை படித்துக்கொண்டிருந்தான். அவள் மகனைப்பார்த்து "உள்ளேவாடா; நான் உன்னோடு வார்த்தைசொல்லவேண்டும்" என்றாள்.

பத்திரிகையை வைத்துவிட்டுக் கோபாலன்மெதுவாகத்தாய்க்குப்பின்சென்றான். அவள் அவனைத்தனது அறைக்கு அழைத்துக்கொண்டு போய் "அப்பா, நான் உனக்குக் கல்யாணம் பண்ணிவைக்கவிரும்பியிருக்கிறேன். நீ எனதுமூத்தபிள்ளை. எனக்கொரு மணாட்டிப்பெண் எப்போது வருவாளென்று நான் நெடுநாளாகக் காத்திருக்கிறேன். எனது விருப்பத்தை நீ நிறைவேற்றிவைக்கவேண்டும்" என்றாள்.

கோபாலன் கொள்கையை முன்னரே குறிப்பித்திருக்கிறோம். அவனுக்குக் கல்யாணம் செய்துகொள்ள இஷ்டமில்லை. அது படிப்புமுடியுமுன் விவாகஞ்செய்து கொள்ளலாகாதென்றாவது பணமில்லை

என்றுவது அன்று. அவனுக்கிருந்த தடைவேறு. அது சாஸ்திரத்தைப் பற்றினது. இந்தக்காலத்துக் கன்னியர்கள் பழைய நாளிலிருந்த பெண்கள்போல அடக்க வொழுக்கமுடையவர்கள் அல்லவென்றும், நிறையில்லாத மனமுடையவர்களென்றும், நல்லுடைகளாலே தங்களை அலங்கரித்துக்கொள்ள விரும்பினவர்களென்றும், சாஸ்திரத்தில் விதித்தபடி கணவனைக்கைதொழுது வாழ்பவரல்லரென்றும், கணவனோடு ஒத்த நிலைமையிலிருக்க விரும்பினவர்களென்றும் அவன் கேள்விப்பட்டிருந்ததன்றிப் பத்திரிகைகளிலும் படித்திருந்தான். ஆயினும் அவன் கணவனையிழந்த தனது தாயாரின் வேண்டுகோளை மறப்பதெப்படி? தாயார் தனக்குப் பலமுறை சொன்ன சொல்லைத்தட்டி நடந்து பாபஞ் சம்பாதித்துக் கொள்ள அவனுக்கு விருப்பமில்லை. ஆகவே, தாயார் மற்றொருமுறை கேட்பாளாயின் அவள் கேள்விக்குத் தான் உடன்படவேண்டுமென்றும், அப்படி உடன்பட்டாலும் தனது கொள்கைக்கு மாறாகாதவொருகன்னியைத்தான் தெரிந்து மணஞ்செய்து கொள்ள வேண்டுமென்றும் அவன் முன்னமே நிச்சயித்திருந்தான்.

விவாகவிஷயத்தில் கோபாலனுடைய எண்ணம் முற்றும் வேறென்பது அவனிருந்த விடுதியில் வசித்த அவனது சகபாடிகள் யாவருக்கும் நன்றாகத்தெரியும். இரவிற் சாப்பிட்டுவிட்டு விடுதிவீட்டின் மேற்றளத்தில் வந்து கூடும் பொழுதெல்லாம் அந்த இளைஞர்கள் பேசிக்கொள்வனவற்றுள் இந்த விவாக விஷயமும் ஒன்று. அப்படிப் பேசும்போதெல்லாம் கோபாலன் “நான் கல்யாணம் செய்துகொள்ள நேரிடின், ஒரு கறுத்த அழகில்லாத பெண்ணையே செய்துகொள்வேன். அழகுள்ள பெண்களுக்கெல்லாம் கர்வம் அதிகம். கணவனுடைய தாய்தந்தையரிடத்தில் அவர்களுக்கு மரியாதைகிடையாது; கணவனிடத்திலுமப்படியே. பணியுடைய மனைவியர்களாயிருத்தலைவிட்டு அவர்கள் புல்லொழுக்கம் பூண்டுகொள்ளுகிறார்கள். அலங்காரப்பிரியர்கள்; அளவுக்கு மிஞ்சின இறுமாப்புள்ளவர்கள். அவர்கள் தங்களை அழகுள்ளவர்களாக மதித்துக்கொண்டு எந்நேரமும் தங்கள் அழகை எவ்வாறு சிறப்பிக்கலாமென்ற எண்ணமொன்றே உடையவர்களாயிருக்கிறார்கள். அவர்களுக்கு ஐரோப்பியர் உபயோகிக்கும் சோப்புவகைகளும் பவுடரும் வேண்டும்; பட்டுச் சேலைகளும், வெல்வெட் ரவிக்கைகளும் வேண்டும். புருஷனாகவருபவன் இவைகளுக் கெல்லாம் பணம்கொடுக்க வேண்டும். அதுவுமன்றிப் படித்தபெண்ணை நான் விவாகஞ்செய்ய மாட்டேன். அவர்களுக்கு வேலை கதைகள் படிப்பதும், கடுதாசி ஆடுவதும், கடிதம் எழுதுவதுந்தான்; வீட்டுவேலைதெரியாது; பூசைபண்ண நேரங்கிடையாது; பிள்ளைகளைப்பார்க்க முடியாது” என்பான். இவ்விதமான பேச்சுக்களைக் கேட்டுவிட்டு அவன் நண்பர்களுட் சிலர் “நல்லது! கோபாலா, நல்லது! காலம் வரும்போது நீ என்ன செய்வாயென்பதை நாங்கள் பார்க்கப்போகிறோம். இந்த மாதிரிப் பேசினவர்கள் எத்தனைபேர்! சொல்லுவது எளிது; சொன்னபடி செய்வது அரிது” என்பார்கள்.

இவ்வாறு தனது நண்பர்கள் தனது திண்மையை ஐயுற்றுக் கூறுவதைக் கேட்டவுடன் கோபாலன் சிறிது கோபமடைந்து, “ஆம், ஆம்; நீங்கள் பார்க்கப் போகிறீர்கள்; அப்பா, நீங்கள் பார்க்கப்போகிறீர்கள். சொல்வதொன்று செய்வதொன்று நான் அன்று” என்பான்.

தாயார் அவனை அடிக்கடிநெருக்கினதின் நிமித்தம் கோபாலன் சம்மதித்து “நல்லதம்மா, எனக்குவரப் போகிற மனைவியை முன்னே நான் பார்த்து எனக்குச் சம்மதிப்படுமாயின் நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளுகிறேன்” என்று சொன்னான்.

தாயார் மனங்களித்து “நீ கல்யாணம் பண்ணிக் கொள்ளு முன்னம் பெண்ணைப் பார்க்கவேண்டுமென்று சொல்லுகிறாய். நல்லது, நான் பார்த்திருக்கும் பெண் நல்ல அழகுள்ளவள்; கண்டவர் மனத்தைக் கவருபவள். அவளுக்கு வயது பதின்மூன்றாகப்போகிறது” என்றாள்.

கோபாலன் திடுக்கிட்டு “அவள் அவ்வளவு அழகுள்ளவளா?” என்றான். “நிரம்பவழகி! அவளுடைய முகம் இலக்ஷ்மியின் முகமே; மூக்குமது, கண்ணுமது, நெற்றியுமது; நிறம் செந்தாமரைப் புஷ்பம்” என்றாள் அவனுடைய தாய்.

கோபாலன், ஆலோசனையிலாழ்ந்து, மெல்லவாக “அம்மா, அப்படிப்பட்ட பெண்ணை நான் கல்யாணம் பண்ணிக்கொள்ளமாட்டேன்” என்றான்.

அவனுடைய தாய் ஆச்சரியமடைந்து “ஏன்? என்ன காரணம்?” என்றாள்.

“நான் அழகுள்ள பெண்ணைக் கலியாணம் பண்ணிக்கொள்ள மாட்டேன்.”

“பின்னர் எப்படிப்பட்ட பெண்ணை நீ கல்யாணம் பண்ணிக்கொள்ளுவாய்?”

"நான் ஒரு கறுத்த அழகில்லாத பெண்ணைப் பண்ணிக்கொள்ளுவேன்" என்றான் கோபாலன். அப்போது அவன் குரல் இடியிடித்தாற்போலிருந்தது. அவனுடைய தாய் முன்னிலு மதிகம் ஆச்சரியமடைந்து "அடே மடையா, ஒவ்வொருவரும் அழகுள்ள பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள ஆசைப்படுவார்கள். அழகுள்ள பெண் கிடைப்பது எளிதல்லவே" என்றாள்.

இஷ்டமுள்ளவர்கள் அழகுள்ள பெண்களைக் கல்யாணம் செய்துகொள்ளட்டும். எனக்கழகில்லாத பெண்ணுதான் வேண்டும்" என்றான் கோபாலன். அப்படி அவன் சொன்னபோது அவன் மனத்திற்றோன்றிய பெருமிதங் காரணமாக அவன் முகம் பிரகாசித்தது. அவன் ஆயிரத்திலே ஒருவன் அன்றோ! அவனும் மற்றெல்லாரையும்போல் ஆசைக்காகக் கல்யாணம் பண்ணிக்கொள்ளுகிறதா?

தாயார் சிறிது மனவருத்த மடைந்ததைக் கண்டு கோபாலன் தனது எண்ணங்களை அவளுக்கு வெளியாகச் சொன்னான். அழகுள்ள பெண் இல்லறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கையுடையவளாயிருத்தல் சிறிதும் முடியாதென்று அவன் எடுத்துக்காட்டினான். பின்பு கடைசியாகத் தனதுகொள்கை மாறாதென்றும், அசையாதென்றும், ஒருகாலும் அழியாதென்றுஞ் சொன்னான்.

அவன் சொன்னவற்றைக் கேட்டபின் அவனுடைய தாய் அன்றுயாதொன்றும் அதனைப்பற்றி அவனோடு பேசவில்லை. அவனுடைய விடுதலைநாளும் முடிந்தது; அவனும் பட்டணம் போய்விட்டான்.

---

சிலநாள்சென்றபின் நடேச சாஸ்திரியார் மனைவி ஒரு வண்டியிலேறிக்கொண்டு கோபாலனுடைய தாய் வீட்டுக்கு வந்தாள். க்ஷேம சமாசாரங்கள் விசாரித்தபின் நடேச சாஸ்திரியார் மனைவி "மதனி, கோபாலனுக்குச் சம்மதந்தானா?" என்றாள்.

"அவனுக்குக் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் பிரியந்தான்; ஆனால் அவனுக்கோரெண்ணமுண்டாயிருக்கிறது."

"என்ன எண்ணம்?"

"முதலில் அவன் ஓம் சொல்வதற்கு முன்னம் தான் பெண்ணைப் பார்க்கவேண்டுமென்று சொன்னான். நான் அதற்கு நல்லதென்று சொன்னேன். அவன் மனத்திற்கியைந்தபடி எல்லாவிதத்தாலும் அழகுள்ள ஒருபெண்ணைக் காண்பிக்கலாமன்றோ? பின்னர் அவன் சொன்னான்: தான் அழகுள்ள பெண்ணைக் கல்யாணம்பண்ணமாட்டானாம். அவனுக்கு ஒரு கறுத்த அழகில்லாத பெண் வேண்டுமாம்.

நடேச சாஸ்திரியாரின் மனைவிக்கு ஆச்சரியமாயிற்று. "இவ்விதமாக இயற்கைக்கு மாறான எண்ணமுடையவர்களைப்பற்றி நான் கேட்டதேயில்லை. ஏன் அவனுக்கு இந்த எண்ணமுண்டாயிற்று?" என்றாள்.

அப்போது கோபாலனுடைய தாய் அவன் தனக்குச் சொன்ன நியாயங்களை எல்லாம் எடுத்து அவளுக்குச் சொன்னாள். அவள் சற்றுநேரம் யோசனை செய்துவிட்டு "நான் ஒரு காரியம் சொல்லுகிறேன்; நீ அந்தப்படி செய். கோபாலனை இந்தச் சனிக்கிழமை இங்கே வரும்படி எழுது. அவன் மனம்போல ஒரு பெண்ணை நீ பார்த்து வைத்திருப்பதாயும் அவளைவந்து பார்க்கும்படியாயும் எழுது. அவன் இங்கே வந்தபின் ஞாயிற்றுக்கிழமை சாயங்காலம் அவனை எங்கள் வீட்டுக்கு அனுப்பிவை; பின்பு நான் எல்லாம் பார்த்துக்கொள்ளுகிறேன்" என்றாள்.

கோபாலனுடைய தாய் அதற்குடன்பட்டாள். அவள் எண்ணினாள்: "நடேசசாஸ்திரியார் பாரியாளுடையகருத்து கோபாலன் தன்மகள் கமலாம்பாளைக்கண்டால் அவளைக் கல்யாணம்பண்ணிக்கொள்ளாதிரானென்பது. அது ஆச்சரியமன்று; அந்தப் பெண் அவ்வளவு அழகுள்ளவள்தான்" என்று.

கோபாலன் சனிக்கிழமை வீடுவந்து சேர்ந்தான். மறுநாள் சாயங்காலம் அவன் விரித்த தலையோடு ஒரு மாட்டுவண்டியிலேறிப் புலியூர்ப் பக்கத்திலிருந்த நடேசசாஸ்திரியார் வீட்டைநோக்கிப் புறப்பட்டான்.

அங்கே போய்ச் சேர்ந்தவுடன் நடேச சாஸ்திரியார் ஏதோ ஒரு வேலையாக வெளியே போய்விட்டதாக அவன் அறிந்தான். ஓர் இளைஞன் அவனை மரியாதையாக எதிர்கொண்டு உள்ளே அழைத்துச் சென்றான். அந்த இளைஞன் நடேசசாஸ்திரியாருடைய தமையன் பிள்ளை. சிறிது நேரமானவுடன் ஒரு வேலைகாரப்பெண் வந்து அவர்களை உள்ளே அழைப்பதாகச் சொன்னாள். அவள் கோபாலனைப் பார்த்து விஷமமாக முறுவலித்தாள்.

இளைஞர்கள் இருவரும் உள்ளே சென்றார்கள். கோபாலன் வேலைக்காரரெல்லாம் தன்னைப்பார்த்து இரகசி

யமாகச் சிரிப்பதாக எண்ணிக்கொண்டான். மிக அழகாக அலங்காரஞ்செய்யப்பட்டிருந்த ஓரறைக்கு அவனை அழைத்துக்கொண்டு போனார்கள். அந்த அறையின் நடுவில் ஓராசன மிட்டிருந்தது. அதற்கு எதிரில் வெள்ளித்தட்டங்களில் பழங்களுஞ் சிற்றுண்டிகளும் வைத்திருந்தன. அதற்குச் சற்றுத் தள்ளி வேறொரு மணைபோட்டிருந்தது. நடேச சாஸ்திரியார் தமையன்பிள்ளை கேள்விப்படி கோபாலன் சிற்றுண்டி சாப்பிட ஆசனத்தின்மேல் இருந்தான். அப்போது காற்சிலம்பொலி வெளியில் கேட்டது. வேலைகாரிஒருத்திஒருபெண்ணை அழைத்து வந்தாள். அந்தப் பெண்வந்து மணைமேலிருந்து மருண்டு நான்கு புறமும் பார்த்தாள்.

கோபாலன் வெட்கமுற்றுத் தலையைக்குனிந்து கொண்டான். அவன் பழத்தை மெல்ல மெல்லத் தின்றுகொண்டு, அந்தப் பெண்ணைக் கடைக்கண்ணால் பார்த்தான். அவள் கறுப்பு வர்ணமுள்ள உண்ணாட்டுப்புடைவை ஒன்று உடுத்திருந்தாள். அவளது தலை பின்னிச்சடைபோடாமல் கோதி முடித்திருந்தது. குழிந்து ஆழ்ந்து சிறுகிய அவளுடைய கண்கள் ஓயாமல் நான்கு புறத்துமோடிக் கொண்டிருந்தன. அவளுக்கு நெற்றி உயர்ந்திருந்தது; மோவாய் சிறிதுமில்லை; முன்பல் வெளிப்பட்டிருந்தது. அவள் தன் எண்ணம்போலத் தக்க மனைவியாவாளென்று கோபாலன் எண்ணினான். அவன் செருமித் தொண்டையைச் சுத்திசெய்துகொண்டு, மனத்தை ஒருப்படுத்தி, அந்தப் பெண்ணைநோக்கி "உனது பெயரென்ன?" என்று கேட்டான்.

அந்தப்பெண் சட்டென்று கோபாலனைப்பார்த்து நாக்கை நீட்டி "என்ன?" என்று கேட்டாள்.

"உனது பெயரென்ன?" என்றான் கோபாலன்.

"என்பேர் காவேரி" என்றாள் அந்தப்பெண்

அவள் அவ்வாறு சொன்னதைக் கேட்டதும் நடேச சாஸ்திரியாரின் தமையன்பிள்ளையும் அந்தப்பெண்ணை அழைத்துவந்த வேலைகாரியும் அவளைக்கோபித்துப்பார்த்தார்கள். அவள் உடனே "எனது பெயர் கமலாம்பாள்" என்றாள்.

நடேசசாஸ்திரியாருடைய தமையன்பிள்ளை "முன்னே அவளுக்குப் பேர் காவேரி; இப்போது நாங்கள் அவளைக் கமலாம்பாள் என்றுதான் சொல்லுகிறது" என்றான்.

கோபாலன் எண்ணினான்: "மாற்றிவைத்த பெயர் நன்றாயில்லை. கமலாம்பாள்!! காவேரி என்பது மிகவும் நன்றாயிருக்கிறது. நமது நாட்டிற்குயிர் போன்றுள்ள நதியின்பெயர்; மரஞ்செடிகளின்பெயரன்று. நான் இவளைக் கல்யாணம்செய்துகொண்டால் இந்தப் பெயரைத்தான் மறுபடி வைத்துக்கொள்வேன்" என்று. அவன் பின்பு அந்தப்பெண்ணை நோக்கி "நீ படிக்கிறாயா?" என்று கேட்டான்.

அந்தப் பெண் முன்போலவே நாக்கை நீட்டி "என்ன?" என்று கேட்டாள்.

"நீ படிக்கிறாயா?" என்றான் கோபாலன்.

"நான் படிக்கிறதில்லை. என் தம்பி—" என்று தொடங்கினாள் அந்தப்பெண்.

வேலைகாரியும் நடேச சாஸ்திரியாருடைய தமையன்பிள்ளையும் அவளைக் கோபித்துப் பார்க்கவே அவள் பேசாது இருந்துவிட்டாள். கோபாலனுக்கு மிகவுஞ் சந்தோஷமாயிற்று. அதுதான் அவன் விரும்பினது. இனி அவளைப் புராதன கொள்கைப்படி மனையறம் நடத்தத் தகுந்தவளாக்குவது தனக்கு எளிதென்று அவன் எண்ணினான். முதலில் அவன் அவளைக்கண்ணாற் பார்த்துவிட்டான் ஒரு காரியம் முடிந்தது. இனி அவன் எடுத்துக்கொண்ட விரதமிருக்கிறது. கல்யாணம் நிச்சயமானபின் முகூர்த்தத்திற்குத் தன் நண்பர்களை வரவழைக்க வேண்டுமென்று அவன் எண்ணினான் பின்னர் அவன் அந்தப் பெண்ணை நோக்கி "நல்லது, இனி நீ போகலாம்" என்று சொன்னான்.

அவள் முன்போலவே நாக்கை நீட்டி "என்ன" என்றாள். "நீ போகலாம்" என்றான் கோபாலன்.

வேலைகாரி அவளை அழைத்துக்கொண்டு போயினாள். கோபாலனும் சிற்றுண்டி சாப்பிட்டு முடித்தான். அப்போது பதின்மூன்று வயதுள்ள ஒரு பெண் வெள்ளித் தட்டத்தில் தாம்பூலம் கொண்டு வந்தாள். அவள் மிகவும் அழகுள்ளவள்; குறநாட்டுப் பட்டுச் சிற்றாடை கட்டியிருந்தாள்; காலில் ஒரு வெள்ளிக்காப்பும் சதங்கையும் கையில் பொற்காப்புங் கொலுசும் அணிந்திருந்தாள். தாம்பூலத்தட்டைக் கோபாலன்முன் வைத்துவிட்டு அவள் போனாள். போகும்போது அவள் கோபாலனைக் கடைக்கண்ணாற் பார்த்துப் புன்முறுவல் செய்தாள். "இவள் ஓரழகிதான். இவளைக் கல்யாணம் செய்துகொண்டால் நான் என்னபாடு படமாட்டேன்? எனது நெடுநாளை விரதம் பாழாய்ப் போய்விடுமன்றோ" என்று எண்ணினான் கோபாலன். தான்

கொண்ட விரதம் நிறைவேறினதைப்பற்றி அவன் தன்னைத்தானே புகழ்ந்து மிக்க மனக்கிளர்ச்சி அடைந்தான்.

நடேச சாஸ்திரியாருடைய தமையன் பிள்ளை கோபாலனை முதற்கட்டுக் கழைத்துக்கொண்டுபோனான். வேலைகாரி கொஞ்சம் புன்சிரிப்போடு “கல்யாணப்பெண்ணைப் பார்த்ததில் உங்களுக்குச் சம்மதந்தானோ வென்று எங்கள் அம்மாள் கேட்கிறார்கள்” என்றாள். கோபாலன் பெருமிதத்தோடு “ஆம்” என்றான்.

---

திரும்பி வீட்டுக்குப் போகும்போது அன்றுசாயந்தரம் நடந்தவைகளை எல்லாம் கோபாலன்மனத்தில் எண்ணிக்கொண்டு போனான். அவன் போகும் வழியிலே அந்த ஊர்ப்பெண்கள் அநேகர் கோயிலிலிருந்து ஜலமெடுத்துக்கொண்டு வந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவருடைய முகத்தையும் கோபாலன் பார்த்தான். சிலருடைய முகங்கள் சிவப்பாயிருந்தன; பலருடைய முகங்கள் கறுப்பாயிருந்தன. அவர்கள் ஒருவருடைய முகமாவது காவேரியின் முகம்போல அவலக்ஷணமுள்ளதாயிருக்கவில்லை. கோபாலன் ஏறிவந்தவண்டி ஊரைக்கடந்து சென்றது. அப்போது அவன் தான் தனது மனத்தை அது நினைத்தபடி சொல்லவிடாது அடக்கித் தன் கொள்கையை முடித்து விட்டதற்காகப் பெருமிதமடைந்தான். ஆயினும் தான் கலியாணம் செய்துகொள்ள நிச்சயித்த பெண் அவ்வளவு அவலக்ஷணமுள்ளவளாயிருப்பது அவசியமில்லை என்று அவனுக்குத் தோன்றிற்று. “நிச்சயஞ் செய்தாய்விட்டது. இனி ஆலோசித்துப் பயனென்?” என்று அவன் எண்ணினான். அவ்வாறெண்ணிக் கொண்டு வீடுசேர்ந்தான். அவனைக் கண்டவுடன் அவனுடைய தாயார் “என்ன, பெண்ணைப் பார்த்தாயா” என்று ஆவலோடு கேட்டாள்.

“ஆம் பார்த்தேன்” என்றான் கோபாலன்.

“அப்படியானால், நான் அந்தப்பெண்ணை நிச்சயம் செய்யட்டுமா” என்றாள் அவன்றாயார்.

“ஆம்” என்றான் கோபாலன்.

“வருகிற தைமாதத்திலே ஆகலாமா” என்று கேட்டாள் தாய்.

“அப்படியே ஆகட்டும்” என்று சொல்லி நழுவிவிட்டான் கோபாலன். தாய் மகனுக்கு மனஞ் சந்தோஷமாயில்லை என்பதைக் கண்டுகொண்டாள். அவள் எண்ணினாள்: “அவனுக்கு அந்தப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் பிரியந்தான்; இருந்தாலும் அழகுள்ளபெண்ணைக் கல்யாணம் செய்துகொள்வதில்லை என்று பலமுறையும் சபதஞ்செய்துவிட்டு இப்போது ஒரு நல்ல அழகுள்ளபெண்ணைக் கல்யாணஞ்செய்துகொள்ள நிச்சயித்ததற்கு வெட்கப்படுகிறான்” என்று. கோபாலன் அன்றிரவு சாப்பிடவில்லை. தான் போயிருந்த வீட்டில் அதிகமாகச் சாப்பிட்டு விட்டதாகவும் தனக்குப் பசியில்லை என்றும் அவன் சொல்லிவிட்டான். தான் தன் மனத்தை அடக்கித் தனது கொள்கையை முடித்து விட்டேனென்று அவன்கொண்ட பெருமிதம் சிறிது சிறிதாகக் குறையத் தலைப்பட்டது. காவேரியின் முகத்தை நினைக்கும் போதெல்லாம் அவன் மனம் அழுங்கினது. அவள் அவலக்ஷணமுள்ளவளாயிருந்தாலும் கொஞ்சமாவது அறிவுள்ளவளாயிருந்தால் குற்றமில்லையே என்று அவன் எண்ணினான். திங்கட்கிழமை காலை கோபாலன் பட்டணத்திற்கு ரயிலேறிப் போயினான். அவன் போகும்போது தாயார் “முகூர்த்தத்திற்குப் பத்துநாள் தானிருக்கிறது; அதற்கு இரண்டு நாளுக்குமுன்னரேயே வந்துவிடு” என்று சொன்னாள்.

விடுதி வீட்டிலே கோபாலனுடைய தோழர்கள் அவன் முகம் வாடியிருப்பதை நோக்கினார்கள். தனது அறைக்குள்ளே போய் அவன் தனியே யிருந்தான். அவன் சிதம்பரத்திற்குப்போகுமுன்னரே தனது தோழர்களுக்குத் தான்போகுங்காரியம் இன்னதென்று சொல்லியிருந்தான்; அதனால் அவர்கள் ஒருவர்பின் ஒருவராக அவன் அறைக்குள்வந்து “என்ன சமாசாரம்?” என்றுகேட்டார்கள்.

கோபாலன் சங்கடப்பட்டுச் சிரித்து “எல்லாம் நல்ல சமாசாரந்தான்” என்றான். அவர்கள் அவனைப்பெண் எப்படியிருப்பாளென்றும் படித்தவளோ என்றும் வயதென்னவென்றும் கேட்டார்கள். ஒருவன் திடீரென்று பெண்ணின் பெயரென்னவென்று கேட்டான். கோபாலன் பெயரைச் சொன்னான். அதைக் கேட்டவுடனே ஒவ்வொருவர் முகத்திலும் ஒரு நகைக்குறிப்புத் தோன்றிற்று. ஒருவன் மாத்திரம் தன்னை அடக்கிக்கொள்ளமுடியாமல் “காவேரி! ஆகா! காவேரி! நல்லொரு பெயர், இல்லையா?” என்று சிரித்தான். “ஏனடா ராமா! சிரிக்கிறாய்?” என்றான் கிட்டு. “நான் சிரிக்கவில்லை. இ! இ! இ! நான் ஏன் சிரிக்கவேண்டும்?

இ! இ!! என்று மீட்டும் சிரித்தான் ராமு.

“அந்தப் பெயருக்கென்ன! அது புராதனமான பெயர்! இந்தக் காலத்தில் உங்களுக்குச் சரசி, ராஜி, ராஜேஸ்வரி என்று புதுப்புதுப் பெயர்கள் வேண்டும்” என்றான் ராதாகிருஷ்ணன். அதைக் கேட்டுக் கோபாலன் ஆலோசனைகொண்டு தலைஅசைத்தான். இவைகளில் அவனுக்கிருந்த பழைய ஊக்கம் இப்போது அதிகம் குறைந்துவிட்டது. முகூர்த்தத்திற்கு இன்னும் ஒன்பது நாள் தான் இருந்தது. அந்த ஒன்பது நாளும் கோபாலனுக்கு எவ்வாறு கழிந்ததென்பது அவனுக்குத் தெரியும். அவனுடைய தோழருக்கும் ஒரு சிறிது தெரியும். காவேரியை நினைக்க நினைக்க அவனுக்கு மனக்கலக்கமதிகமாயிற்று. அவன் கல்லூரிக்குப் போனபோதிலும் அங்கே சொன்ன பாடமொன்றும் அவன் காதில் நுழையவில்லை. விடுதிவீட்டில் அவனுக்கு நன்றாகச் சாப்பிடுபவனென்று பெயர். இப்போது அவன் இலையில் வைத்த சாதத்தில் பாதியிருந்தது. தோழர்களோடு பேசுவதை அவன் விட்டுவிட்டான். ஒன்றிலும் அவனுக்கு மனஞ் செல்லவில்லை. “கோபாலா, என்னடா! மன்மதபாணம் பலமாய்ப் பாய்ந்துவிட்டதுபோலிருக்கிறது!” என்று அவனுடையதோழர்கள் நகையாடத் தொடங்கினார்கள். இராத்திரியில் படுக்கையில் படுத்தாலும் அவனுக்கு நித்திரை வருவதில்லை; அந்தப்புறமும் இந்தப்புறமும் உருண்டுருண்டு கிடப்பான். கடைசியாய் நித்திரை வந்தபோது பயங்கரமான கனவுகள் காண்பான்.

ஒரு கனவிலே காவேரியின் முகம் அவனுக்குக் காளியின் முகம்போலக் காணப்பட்டது. அவன் கண்ணுக்குப் புலப்பட்ட அவளுடைய நாக்கின் சிறுபாகம் அக்கினிக் கொழுந்து போலத் தோன்றிற்று. அவளுக்கு நாலு கைகள் இருந்தன. ஒரு கையில் இரத்தந்தோய்ந்த வாளிருந்தது; மற்றொரு கையில் வெட்டுண்ட தலையொன்றிருந்தது. அந்தத் தலை கோபாலனுடைய தலைபோலக் காணப்பட்டது. மற்றொருகனவிலே அவன் ஒருமுள்ளடர்ந்தகாட்டிற்குள் போய் அகப்பட்டுக்கொண்டான். அந்தக் காட்டிலிருந்து வெளிப்படுவதற்கு அவன் கஷ்டப்பட்டு வழிதேடிக்கொண்டிருக்கும்போது எருமையொன்று அவனை முட்ட வந்தது. அந்த எருமை ஒரு கறுப்புப் புடைவை போர்த்திருந்தது. அதன் முகம் காவேரியின் முகமே. ஆயினும் அதற்கு இரண்டு கொம்பிருந்தன. முகூர்த்தத்திற்கு மூன்று நாள் இருந்தபோது கோபாலன் தனது தாயாருக்குக் கடிதமெழுதிக் கல்யாணத்தை நிறுத்திவிட வேண்டுமென்று எண்ணினான். அவன் அன்று கல்லூரிக்குப் போகவில்லை. தனது அறைக்குள்ளே தன்னந்தனியே இருந்து கடிதமெழுதி யெழுதி அவன் கிழித்துக்கொண்டிருந்தான். “கல்யாணம் குழம்பிவிட்டதென்று கேட்டால் தனது தோழர்கள் என்ன சொல்வார்கள்? அவர்களுடைய சிரிப்பையும் பழிப்பையும் தன்னால் எவ்வாறு தாங்கமுடியும்?” என்று அவன் எண்ணினான். அவன் அன்றிரவு படுக்கையில் கிடந்துகொண்டு ஒருவரோடும் பேசாது தேசாந்தரம் போய் விடுவதாக நிச்சயித்தான். உடனே அவன் படுக்கையைவிட்டெழுந்து விளக்கைக் கொளுத்தி ரயில்வேக் கயிட்டுக்களைத் திருப்பித்திருப்பிப் பார்த்தான். பின்பு பொழுது விடிந்தவுடனே அவன் மனம் மாறிவிட்டது. ‘ என்ன! இத்தனை நாளும் இவ்வளவு பெருமிதம் பேசிவிட்டுக் கடைசியில் ஏழைநெஞ்சன் என்று பெயரெடுப்பதா? அது ஒருபோதும் ஆகாது. என்னவந்தாலும் வரட்டும்; நான் கொண்ட விரதத்தை முடித்தேதீர்க்கவேண்டும்” என்று அவன் எண்ணினான்.

குறித்த தினத்தில் அவன் வீட்டிற்குச் சென்று முகூர்த்தத்தன்று கல்யாணப்பந்தலிலும் போய்ச் சேர்ந்தான். அங்கிருந்த ஜனக்கூட்டத்தையும் வெளிச்சத்தையும் ஆரவாரத்தையும் பார்ககவே பத்து நாளாய் அவன் பட்ட மனவருத்தம் போய் அவனுக்கு ஓர் உற்சாகம் உண்டாயிற்று. போர்முகத்திலே ஏழைகள் கூடப் பயம் நீங்கி விடுவார்கள்.

முகூர்த்தம் ஆரம்பித்தது. அவன் மனமும் வைராக்கியமடைந்தது. அச்சமாவது அழுகையாவது ஆசையாவது அவலமாவது அவனுக்கு உண்டாகவில்லை. கடைசியாய்க் கல்யாணப்பெண்ணைப் பந்தலுக்கு அழைத்து வந்தார்கள். பெண்ணின் முகத்தைப் பார்த்தவுடன் கோபாலன் அளவில்லாத ஆச்சரியமடைந்தான். அவனை இந்தப் பத்துநாளும் பயப்படுத்தின பேய் இதுதானா? அவனுடைய கனவில் வந்து தோன்றின அவலக்ஷணமுள்ள காவேரி இவளல்லவே! அவனுக்கு அன்று வெள்ளித் தட்டத்தில் தாம்பூலங்கொண்டுவந்த அழகியன்றோ இவள்!

நாலாநாளிரவு கோபாலன் தனது நாயகியோடு பேசமுயன்றான். சிறிது நேரம்வரை அவளைப்பேசப்பண்ண அவனால் முடியவில்லை. கடைசியாய் அவன் ஓர் உபாயம்செய்தான். அவளுடைய மனுஷர்கள் மேல் ஏதாவது குற்றம் சொன்னால் அவள் அதனை மறுக்கப்புகுவாள் என்று எண்ணி "உனது தாயார் அன்றைக்கு இந்தவேலை ஏன் எனக்குச் செய்தாள்" என்று அவன் கேட்டான்.

"நான் அழகாயிருக்கிறபடியால் என்னை நீர் கல்யாணம் பண்ணிக்கொள்ள மாட்டேனென்று சொல்ல வில்லையோ? அவர்கள் செய்தது உமக்குத்தகும்" என்றாள் அவன் நாயகி.

அதுவரைக்கும் கோபாலனுக்கு அன்று அவர்கள் செயதது என்னவென்று விளங்கவில்லை. அவன் அப்போது தெளிந்து "அன்று நான் பார்த்த பெண்யார்" என்று கேட்டான்.

"அவள் இந்த ஊர்வாணியன் மகள். அவர்கள் செய்தது உமக்குத்தகும்" என்றாள் அவன் மணவாட்டி.

* * *

கடைசியாகக் கோபாலன் தபாற்காரன் வருவதற்கு நாலு நாழிகைக்கு முன்னரே பட்டணத்து விடுதிவீட்டின் வாசலிலே தபாலுக்காகத் தெருவிற் காத்து நிற்கத்தலைப்பட்டான்.

[இக்கதை வங்காளிப் பாஷையிலிருந்தெடுத்து அமைக்கப்பட்டது]

தி. த. கனகசுந்தரம் பிள்ளை, பி. ஏ.

---

சொல்லும் பொருளுமற்றுச் சும்மாவிருப்பதற்கே
யல்லும் பகலுமெனக் காசை பராபரமே
கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க, வெல்
லார்க்குஞ் சொல்லுவதென்னிச்சை பராபரமே
எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவுநின்
றெய்வ வருட்கருணை செய்யாய் பராபரமே
இரவுபகலற்றவிடத் தேகாந்த யோகம்
வரவுந்திருக் கருணை வையாய் பராபரமே
வித்தன்றி யாதும் விளைவதுண்டோ நின்னருளாஞ்
சித்தன்றி யாங்களுண்டோ செப்பாய் பராபரமே
எத்தன்மைக்குற்ற மியற்றிடினுந்தாய் பொறுக்கு
மத்தன்மை நின்னருளு மன்றோ பராபரமே

—தாயுமானவர்.

## நமது பெண்களுக்கு எத்தகைய கல்வி கற்பிக்கவேண்டும்

## FEMALE EDUCATION—ITS NATURE

---

பெண்களுக்குக் கல்வி அவசியமா இல்லையா என்றவிஷயமே நம்மவர் மனதைச் சிறிது காலமாகக் கவர்ந்திருந்தது. பூர்வத்தில் நம்நாட்டுப் பெண்களுக்கும் புருஷரைப்போலவே கல்வி கற்பிக்கப் பட்டிருந்ததென்றும், பற்பல காரணச் செறிவால் அவ்வழக்கம் காலக்கிரமத்தில் கைநழுவவிடப்பட்டதென்றும், இந்த சாஸ்திராபிமானிகளெல்லாம் வாதித்தனர். பெண்களுக்குக் கல்வி அவசியமில்லையென்றும், புருஷரைப்போலவே பெண்களும் கல்விப்பயிர்ச்சி யடையுங்கால் நமது சமுதாயமே தலைகீழாய் மறிந்து விடுமென்றும் நம்மவரிற் பலர் எதிர் வழக்குரைத்தனர். இவ்வகையினரில் கலாசாலைப் பட்டதாரிகளும் இல்லாதில்லை. இந்த தேசத்தில் பெண் கல்வி குதிரைக் கொம்பாயிருந்ததென்றும் ஆங்கிலேயர் நம்நாட்டில் காலூன்றி மேற்றிசை நாகரீகம் பரப்பிய பின்னரே அதனைப்பற்றிய எண்ணம் நம்மவர் மனதிற் கிளம்பிற்றென்றும் இன்னொரு வகுப்பினர் தருக்கித்தனர். எவர் கூற்று எங்ஙனமாயினும், பெண்களுக்குக் கல்வி அவசியமே என்னும் எண்ணம் நம்மவர் மனதிற் பதிந்ததும், அதற்கேற்ப பற்பல பாடசாலைகள் ஆங்காங்கே தோன்றியதும், வருஷாவருஷம் பற்பல சிறுமிகள் கலாசாலைப் பட்டம் பெற்று வெளிவருவதும், மிகமகிழத் தக்கனவே. இந்நன்னிலைமைக்கு ஆங்கிலேயர் ஆளுகையே பெரிதும் உதவிபுரிந்ததென்ற உண்மையும் மறக்கற்பாலதன்று.

ஆனால் இப்பொழுது நமது பெண்களுக்குப் புகட்டப்படும் கல்வி நம் நாட்டின் நிலைமைக்கும் நம்மவர் தகுதிக்கும் பொருத்தமானதாவென்றும், அன்றாயின் நமது பெண்களுக்கு எத்தகைய கல்வி கற்பிக்கப் படவேண்டும் என்றும் கவனிக்கவேண்டுவது அநாவசியமாகாது.

அவ்விஷயத்தை ஆராயத் தொடங்குமுன் பெண்களைப்பற்றி நம் நாட்டு வித்வான்களும் புறநாட்டுப் பண்டிதர்களும் எத்தகைய அபிப்பிராயம் கொண்டிருக்கின்றனவென்று நோக்குவதும் பொருத்தமாகவேயிருக்கும். அதனை ஈண்டு நோக்கப் புகுவம்.

"எந்தக் காலம்வரை பெண்கள் முகமலர்ச்சியில்
லாதிருக்கின்றனரோ அந்தக்காலம் வரை உலகம்
சூனியப்பிரதேசமாகவேஇருக்கும்;மனிதரோ—முய
ற்சியற்றவர்களாயிருப்பார்கள்." —காம்பெல்.

"பெண்மணியே! ஆடவரை நற்குணமுடையவ
ராக்க கடவுள் உன்னைப் படைத்தார். நீ இல்லா
விட்டால் நாங்கள் முழுமூடராகவே இருப்போம்."
—தாமஸ் வுட்வே.

"ஆடவர் மனது எத்தகைய துன்பங்களால் வருத்
தப்பட்டிருந்தாலும் மாதர்களின் கடைக்கண்பார்
வை ஒன்றுக்கு அவரை அத்துன்பங்களிலிருந்து
கரையேற்ற சக்தியுண்டு." —கே.

"பூமியில் மிகரம்மியமான பொருள் பெண்ணே
யாம்." —லவல்.

"குணவதியான பெண்ணுக்கு, உலகத்திலுள்ள
இரத்தினங்கள் யாவற்றினும் மிகுதியான விலையு
ண்டு." —பைபில்.

"நாணமில்லா மனைவி அவள் புருஷனுடைய
பாவ பலமேயாவள்." —யங்க்.

"நாணமுடைய பெண்கள் பெரும்பாலும் வினய
முடையவர்களாகவும் குணவதிகளாகவு மிருப்பார்
கள். நன்னெறி பயில குணவதிகளின் சம்சர்க்கத்
தைக் காட்டிலும் மேலான பாடசாலையாது?"
—ஹியூம்.

"பூவுலகிலுள்ள நரகமும் சுவர்க்கமும் பெண்க
ளில் அடங்கியிருக்கின்றன." —டெனிசன்.

"நீ உன் இஷ்டப்பிரகாரம் எல்லாப் பந்தங்களை
யும் நீக்கி நில்;—என்றாலும் – பெண் உன்னை ஆளுகி
றாள்." —மூர்.

"புருஷர் அவர் இஷ்டப்படி சொல்லட்டும்; செய்
யட்டும்; அவரை ஆளுவது பெண்களேயாம்."
—பிக்கர்ஸ்டர்.

"ஒரு பெண்ணை ஆள ஒருநாட்டை ஆளப்
போதுமான சக்தியிலும் மிகுதியான சக்திவே
ண்டும்." —பியூட்டு.

"பெண்ணும் திராக்ஷாரசமும் வாலிபனையும்
வயோதிகனையும் எருப்போல வசீகரப்படுத்து
கின்றன." —மில்டன்.

"நான்படித்த நூலெல்லாம் பெண்களின் கண்
ணோட்டமே. என் பிழைகளெல்லாம் அவற்றினி
ன்றும் கிடைத்தனவே." —டி. மூர்.

"எப்போதும் முணு முணுக்கிற ஒருபெண்ணோடு
மாளிகையில் வசிப்பதைப் பார்க்கிலும் குணவதி ஒரு
வளோடு சிறுகுடிசையில் வசிப்பது மேலானது."
—பைபில்.

"பெண்கள் தேவாலயத்தில் ஞானிகளாகவும்,
வீட்டின் வெளியே தேவிகளாகவும், வீட்டினுள்ளே
நீலிகளாகவும் இருக்கிறார்கள்." —ஜி. வில்க்கின்ஸ்.

"கட்டழகமைந்த ஒரு பெண் நகைக்கும்பொ
ழுது அவளுடைய பணப்பெட்டி அழுகிறதெனக்
கருதவேண்டும். பெண்களுக்கு அவர் விருப்பப்
படி நகைக்கவும் அழவும் சக்தியுண்டு." —அடிசன்.

"பொன்னை நெருப்பைக்கொண்டும், பெண்ணைப்
பொன்னைக்கொண்டும், மனிதனைப் பெண்ணைக்
கொண்டும் சோதனை செய்யலாம்."
—பெஞ்சமின் பிராங்கிலின்.

"பெண்கள் நேசமாயிருக்கும்பொழுதும் பகை
யாயிருக்கும்பொழுதும் எதுவுஞ்செய்யப் பின்னடை
யார்கள்" —கூலிக்கிபர்.

"பெண்கள் மனதும் மாரிகாலக்காற்றும் எப்
பொழுதும் மாறுதலடைந்து கொண்டேயிருக்
கும்." —போப்.

"பெண்களின் அன்பும் நம்பிக்கையும் மணல்மே
லெழுத்தையொக்கும்." —ஸ்காட்டு.

"புருஷனுக்கு உலகம் அவன்மனமும்,பெண்களு
க்கு அவள் மனம்உலகமுமாக இருக்கின்றது."
—லேடி பிலங்டன்.

"தாரமாறுதது வாழ்க்கையன்று."
—பழமொழிக்காஞ்சி.

"நீறில்லா நெற்றிபாழ், நெய்யில்லா வுண்டிபாழ்
ஆறில்லா வூருக் கழகுபாழ்—மாறில்
உடற்பிறப் பில்லா உடம்புபாழ் பாழே
மடக்கொடி யில்லா மனை" —"ஔவையார்"

"இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை" —திருக்குறள்.

"வினைகாத்து வந்த விருந்தோம்பி நின்றான்
மனைவாழ்க்கை நன்று தவத்திற்—புனைதோகை
மெல்லிய னல்லாளு நல்லள் விருந்தோம்பிச்
சொல்லெதிர் சொல்லா ளெனில்"
—"அறநெறிச்சாரம்"

"தூமகேது புவிக்கெனத் தோன்றிய
வாமமேகலை மங்கையரால் வருங்
காமமில்லை யெனிற்கடுங் கேடெனு
நாமமில்லை நரகமு மில்லையே" —கம்பர்.

"ஓதி யுணரினும், மாதருள்ள
மலையெறி கடலினுஞ் சலன மென்ப,
திரைபொரில் கரையினும் வெளியினு மன்றி,
கயத்தினு மகத்தினுங் கலக்க மவர்க்கிலை,
தியக்கமு மயக்கமுஞ் செறிவ தரிவையர்,
உள்ளப் பரப்பி லொருபுறத் தன்றி,
பள்ளத் தாழ்ச்சியிற் பரிவும், கொள்கை,
விள்ளா முரணும், மெய்ம்மையிற் றெளிவும்
உள்ளார், அவர்தம் முறுதிநீ யுணராய்."
—"மனோன் மணீயம்"

"பறைநன் று பண்ணமையா யாழி னிறைநின்ற
பெண்ணன்று பீடிலா மாந்தரின்—பண்ணழின்
தார்தலி னன்று பசித்தல் பசைந்தாரிற்
தீர்தலிற் றீப்புகுத னன்று"—நான்மணிக்கடிகை.

# சுகாதாரவிளக்கம்

## HYGIENE

பண்டித நடேசசாஸ்திரியார் எழுதியது

### XII அதிகாரம்

---

### தொத்துநோய்கள்

143. தொத்துநோய்.—நமது ஆரோக்கியத்துக்கு முக்கிய சத்துருவாக தொத்துநோயைச் சொல்லலாம் இவ்வியாதி ஓரிடத்தில் ஆரம்பித்தால் பல காரணங்களால் எல்லாவிடங்களிலும் பரவி தீராத்துயரத்தை விளைவிக்கும்; பலவித அம்மைகள், கக்குவாய் இருமல், பொன்னுக்குவீங்கி, கறப்பான், விஷபேதி, பிளேக் என்று சொல்லப்படும் மகாமாரி, இவைகளைப்போன்றவைகள் முக்கியமான தொத்துநோய்கள். இவைகள் நம்மைப் பற்றிக்கொள்ளாமலிருக்க வழிகளை நாம் கற்றறிந்துகொள்வது எவ்வளவோ நலம். இவ்வறிவால் நமக்கும் நம்மைச் சேர்ந்தவர்களுக்கும் பெரும் உபகாரம் உண்டு.

144. தொத்துவியாதி எவ்வாறு நம்மைப்பற்றுகின்றது.—இந்தப் பரிசீலனை வெகுகாலந் தொடங்கி நடந்துகொண்டே வந்திருக்கின்றது. முடிவாக ஒருவியாதியின் மூலமாகிய கரு நம்மேல் படிவதினால் அவ்வியாதி நம்மிடம் தொத்துகின்ற வியாதியாக வளருகின்றதென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது.

ஒரு மனிதனுக்கு தொத்துநோய் என்று சொல்லப்படும் நோய்களில் ஒன்று ஏதோ உண்டாயிருப்பதாக எண்ணிக்கொள்ளுவோம். அந்தநோய் பெரியம்மை யானால் அது எப்படி உண்டாயிற்று? இந்நோய் ஒருவன்மேல் உண்டாவதற்கு முந்தி அவனுடைய தோல் இரத்தம் இவைகளி லெல்லாம் நமது கண்ணுக்குத் தெரியாத அணுக்கள்போன்ற சிறு கருக்கள் வியாதியின் அண்டங்களாக பரிணமித்துக்கொண் டிருந்தனவென்றும் இச்சிறு அண்டங்கள் பாவும் சிதறி வியாதிகள் விளையும் பொழுதுதான் அந்நோயாளியிடம பெரியம்மை தோன்றுகின்றதென்றும் இந்நோய் ஓங்கிவளரும் பொழுது அந்நோயாளியிடம் அம்மையால் உண்டாயிருக்கும் வலி முதலிய உபத்திரவங்கள் வெகு உக்ரமாக விருக்கின்றதென்றும் இந்நோய் வாடி உலர்ந்துவிட்டதும் அம்மையிறங்கி அந்நோயாளி சௌக்கிய மடைகின்றான் என்றும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது.

இவ்வண்ணம் தொத்துவியாதியின் கருவை அது அண்டமாயிருந்த காலந்தொடங்கி அது நசிக்கும் காலம்வரையில் நாம் வருணித்தோம். ஒருவன் ஒரு தொத்துநோயில் வருந்தும்பொழுது அவன் இக்கருவைப் பலவிதமாக தனது தேகத்தினின்று மற்றவிடங்களுக்குப் பரவச்செய்கிறான். காற்றின் வழியாகவும் துணிகள் வழியாகவும் தேகத்திலிருந்து உதிரும் பொருக்குகள் முதலிய கழிவுகள் இவைகள் மூலமாகவும் இத்தொத்துநோய்மற்றவிடங்களுக்குப் பரவும்.

ஒருவன்மேல் ஒரு தொத்துநோய் நிற்கின்றவரையில் அவன் தேகமானது அவ்வியாதியின் விதைகள் பயிராயிருக்கும் நாற்றங்கால் என்று நாம் சொல்லலாம். அவன் மூச்சுக்காற்று, வியர்வை, மலம், மூத்திரம், வஸ்திரம் முதலான அவனைச்சம்பந்தித்த எல்லா விஷயங்களிலிருந்தும் தொத்துவியாதியின் வித்துக்கள் எத்திசைகளிலும் பரந்துசென்றுகொண்டே இருக்கின்றன. இவ்வித்துக்களை ஒன்றிற்கப்பால் ஒன்றாய் 20,000 வித்துக்கள் வரிசையாய் வைத்தால் ஒரு அங்குல நீளங்கூட ஆகமாட்டாதென்றால் எவ்வளவு நுட்பமானவைகள் இவைகள் என்பதை நாமே ஒருவாறு யோசித்துக்கொள்ளலாம். இவ்வித்துக்கள் ஒவ்வொன்றும் மற்றொருவன் சரீரத்தைப் பற்றிக்கொண்டுவிட்டால் அச்சரீரத்திலும் பலவித்துக்களை உண்டாக்கி இந்நோய் அதிகமாகப் பரவ இன்னும் ஒரு பெரிய காரணத்தை உண்டாக்கிவைக்கின்றது.

145. அம்மைகுத்துதல்.—அம்மையின் உபத்திரவத்தை ஒருவாறு தடுக்க அம்மை குத்துதல் என்ற ஓர்வழியை சுகசந்தர்சன சாஸ்திரிகள் கண்டுபிடித்திருக்கின்றார்கள். இவ்வம்மை குத்துவதால் அம்மைநோய் வாராமலே போய்விடுகின்றது. ஒருகால் நோயின் கடோரத்தால் வந்தாலும் அதிகமாக உபத்திரவம் செய்யாமல் போய்விடுகின்றது. ஒருக் குழந்தை பிறந்த 6-வது வாரம்முதல் அதற்கு அம்மை குத்தலாம். அம்மை குத்துவதற்கு சாதகமான அம்மைப்பால் எங்கும்இக்காலத்தில்சுலபமாகக்கிட்டுகின்றது. ஒவ்வொரு நகரத்திலும் மற்ற விடங்களிலும் முனிஸிபாலிடியாரும் மற்ற அதிகாரிகளும் அம்மைகுத்தவேண்டிய ஏற்பாடுகளை முற்றிலும் செய்துவைத் திருக்கின்றார்கள்.

146. அம்மை குத்துவதெப்படி.—நமது தோள் பட்டைக்குக் கீழாக நமது இருபுஜங்களிலும் ஒன்றின்கீழ் மற்றொன்றாக ஒவ்வொருபுஜத்திலும் மூன்று

தழும்புகள் நாம் பார்த்திருக்கின்றோம். அம்மை குத்துகிறவன் அப்புஜங்களின்மேல் தோலை ஒரு சிறுஊசி அல்லது கத்தி முனையால் சிறிது காயப்படுத்தி அக்காயங்களில் அம்மைப்பாலைச் செலுத்துவான். இப்பால் காயங்களில் நன்றாக உலர்ந்து போகவேண்டும். மூன்று நான்கு நாள் அம்மை வைத்தவிடத்தில் அச்சிறுகாயம் உலர்ந்திருப்பதைத் தவிர வேறொன்றும் காணப்படமாட்டாது. அம்மை வைத்த மூன்றாம் அல்லது நான்காம் நாளில் அக்காயங்கள் கொஞ்சம் தடித்துசிவக்கும். ஐந்தாம்நாளில் சிறு கொப்புளமுண்டாகும். ஐந்தாம்நாள் முதல் பத்தாம்நாள் வரையில் இக்கொப்புளம் பெரியதாய் அதிக சிவந்தும் தடித்தும் வந்து 10 அல்லது 11-வது நாளில் வாட ஆரம்பித்து 12-வது நாளில் அநேகமாய் உலர்ந்துவிடும். அம்மைவைத்த நான்காவது நாள்முதல் 12-வது நாள்வரையில் காய்ச்சல் உண்டு. அதன் பிறகு காலக்கிரமத்தில் அவ்வாறு உலர்ந்த அம்மை உதிர்ந்து தழும்பு தோன்றும். இதுதான் அம்மைவைப்பதென்பது. இவ்வாறு நாம் அம்மை வைத்துக் கொள்ளும்பொழுது அம்மை நோயே நேர்ந்தால் எவ்வாறு நமதுதேகம் மாறுபாடடையுமோ அவ்வாறான மாறுபாட்டை அடைகின்றோமாகையால் அம்மை குத்திக்கொண்டவர்களுக்கு பெரியம்மை புகட்டுகின்றதில்லை என்பது சித்தாந்தம். ஒருதடவை அம்மை புகட்டினவனுக்கும் மற்றொருதடவை புகட்டாது. அம்மையானது நம்மைப்பற்ற ஒருவித ஸாரம் நமதுதேகத்தில் வேண்டும் என்பது ஓர் பிரவித்த வித்தாந்தம். தொத்துவியாதி நம்மை பற்றும்பொழுது அது அச்சாரத்தைமுற்றிலும் வாங்கிக்கொண்டு போய்விடுகின்றதென்றும் அக்காரணத்தால் தொத்துவியாதி நம்மை மறுபடியும் பற்றுகின்றதில்லை என்றும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. அம்மைவைத்துக்கொள்வதால் அத்தொத்துவியாதியை நாமே வரவழைத்துக்கொண்டு அதினின்றும் நம்மை விலக்கிக்கொள்ளுகிறோம்.

சிற்சில சமயத்தில் அம்மை குத்துவது நம்மை பற்றாமலும் நன்றாகப் பலிக்காமலும் போய்விடும். வெகு மும்மரமாய் அம்மை தோன்றும்பொழுது அம்மை குத்தினவர்களுக்கும் அம்மை புகட்டினவர்களுக்கும் சிலவேளையில் அம்மை புகட்டும். ஆனால் அதிக உபத்திரவமுண்டாக்காது. இவைகளை எல்லாம் உத்தேசித்து ஒவ்வொருவனும் 7-வருஷகாலத்துக்கு ஒருதடவை மறுபடியும் மறுபடியும் அம்மை குத்திக்கொள்வது ஆரோக்கியம்.

147. விஷபேதி.—கண்வலி, கக்குவாய் இருமல், சிலவிஷஜ்வரம்(Influenza) (Dengue) காலரா என்று சொல்லப்படும் விஷபேதி இவைகளும் தொத்துவியாதிகள். விஷபேதியால் உண்டாகும் தீமை அதிகம். இது ஒருவித கட்டுக்குள்ளும் அடங்காத தொத்துநோய். இது ஆகாரத்தினாலும், காற்றினாலும், தண்ணீராலும் பரவுகின்றது. இது திடீரென்று சிலவிடங்களில் தோன்றும். சுகாதாரமுறைப்படி என்னதான் சாந்த முறைகள் செய்தாலும் நிற்கமாட்டாது. தோன்றியவிடத்திலிருந்து பதின்காத வழி பரவும். இதன் விஷயமாய் பரீக்ஷிக்க, பரீக்ஷிக்க பிடிபடாத விஷயங்களே அதிகமாகின்றன. இவ்வியாதி சில மணிநேரத்தில் ஒருவனைக் கொல்லும். சிலவேளை 20, 25-நாள் ஒருவன் வருந்தி ஔஷதங்களால் பிழைப்பான். அதிகாரிகளும் வைத்தியர்களும் இதைப்பற்றி ஏற்படுத்தியிருக்கும் சிகிச்சை முறைகளைப்பற்றி அடுத்த அத்தியாயத்தில் விவரமாகச் சொல்லுவோம்.

148.—பிளேக் என்னும் மகாமாரி.—இது வெகு கொடிய நோய். ஒரு அரைஅணுத் தலையின்மேல் 500,000,000-பிளேக் வித்துக்கள் வரிசையாய் அடுக்கலாம் என்றால் எவ்வளவு கொடியநோய் என்பதை நாமே ஊகித்துக்கொள்ளலாம். ஈரம் இந்நோய்க்கு வெகு அனுகூலம். சூரியகிரணம் பெரும் சத்துரு. இம்மகாமாரியின் உபத்திரவம் வஸ்திரங்கள்,கோணிப்பைகள்,தின்பண்டங்கள்,தானியங்கள் இவைகளில் இந்நோயின் வித்துக்கள் சம்பந்திக்க இப்பண்டங்கள் போகுமிடங்களிலெல்லாம் இந்நோய் பரவும்.

பிரவித்தவைத்தியர்கள் இந்நோய் எலி, பெருக்கான், குரங்கு, பூனை, அணில், பாம்பு, மான்முதலிய மிருகங்களையும் பற்றுகின்றதென்றும் இவைகள் ஒரு இடத்தில் அதிகமாக மரிக்க நாம் காண்போமேயானால் அவ்விடத்தில் மகாமாரி உண்டாயிற்றென்பதற்கு அடையாளம் என்றும் சொல்லுகின்றார்கள்.

மகாமாரிபற்றியவன் இரண்டொரு ஜாமத்தில் மாண்டுபோவான். சிலவேளைகளில் 10—15-நாள்வரையில் அவஸ்தைப்பட்டு மாண்டுபோவான். பெரும்பாலும் இந்நோவுகண்ட 5-6 நாள் இந்நோவின் உபத்திரவம் அதிகமாகும். இந்நோவின் வித்து ஒருவனைப்பற்றியதும் ஏராளமாகப் பரவிக்கொண்டேயிருக்குமாகையால் யிழைப்பது துர்லபம்.

இம்மகாமாரியின்வித்து நாம் புசிக்குமாகாரத்தாலும் சுவாசிக்கும் காற்றாலும், அருந்தும் நீராலும்,

இன்னும் நமது தேகத்தின்மேல் ஏதாவது காயம் முதலியவைகளிருந்தால் அவைகளாலும் நமது தேகத்துக்குட் புகுகின்றது.

இந்நோயின் லக்ஷணம்: இந்நோய்கண்ட மூன்றுவது மணிக்கெல்லாம் தேகத்தில் ஓர்வித சோர்வு காணுகின்றது. நமது சருமத்தின் நிறம் கொஞ்சம் மஞ்சள்நிறமாய் மாறும். நோய்கண்டவன் சகிக்கக்கூடாத தலைவலியால் வருந்திக்கொண்டு ஒன்றும் தெரியாமல் படுக்கையில் புரண்டுகொண்டிருப்பான். சிற்சில சமயத்தில் இடுப்பு, முதுகு, விலாப்பக்கம் இவைகள் வலிக்கும், தேகமெல்லாம் நடுங்கிக்கொண்டு பெருங்காய்ச்சல் வரும். இரண்டு மூன்றுநாள் விடாக்காய்ச்ச லடித்தபிறகு துடைச்சந்து, அக்குள் அல்லது கழுத்து, சிலவேளைகளில் இம்மூன்று ஸ்தலங்கள் இவைகளில் கொப்புளம்தோன்றும். இக்கொப்புளம் உண்டானபின் காய்ச்சலின் வேகம் குறையும். அதன்பிறகு அக்கட்டி தனக்குத்தானே அமுங்கிப் போவதாலும் அல்லது சீழ்கொண்டு பழுத்து உடைவதாலும் இந்நோயின் வேகம் குன்றும். வேகம் குறையாமல் நோய் அதிகரிக்கும்பக்ஷத்தில் நோயாளிவாயாலும் மூக்காலும் இரத்தத்தைக்கக்குவான். மலத்திலும் மூத்திரத்திலும்கூட இரத்தம் கலந்துபோகும், கொப்புளம் அழுகி தேகத்தில் வலியும் மயக்கமும் உண்டாகி நோயாளி பிராணனை விடுவான்.

149. மகா மாரிக்கு அம்மை குத்துதல்.—அம்மைக்கு ஏற்படுத்தியிருப்பதுபோல இம்மகாமாரிக்கும் இந்நோயின் பாலை அம்மையாக நமது மேனியில் குத்துவதைக் கண்டுபிடித்திருக்கின்றார்கள். அம்மை குத்தினால் எப்படி அம்மை உண்டாவதில்லையோ அதுபோல இம்மகாமாரி அம்மை குத்துவதால் அவ்வளவு பிரயோஜன மல்லவென்றாலும் பிளேக் அம்மை குத்தப்பட்டவர்களுக்கு பிளேக் உண்டானபொழுது பெரும்பாலும் பிழைத்திருக்கின்றார்களாகையால் இப்பிளேக் அம்மை குத்துதலும் குணமுள்ளதே. இப்பிளேக் அம்மைப்பாலின் வலிமை 6 மாதகாலந்தானாகையால் ஆறுமாதகாலங்களுக்கு ஒருதடவை நாம் அம்மை குத்திக்கொள்ளவேண்டும்.

# நீலி வசீகரம்

## TAMING OF THE SHREW

---

கே.—ஓய்! சாமிநாத வாத்தியாரே!

விஜ.—என்னடா, கேசவா?

கே.—சுப்பராயன் நம்மைப்பார்த்துக் கண்ணைச் சிமிட்டியதை நீங்கள் கவனிக்கவில்லையா?

விஜ.—அதனால் என்ன?

கே.—ஏன், அதைச் சொல்லத்தான் என்னை யிங்கே இருக்கச்சொன்னான்.

விஜ.—என்ன, சொல்லு, பார்ப்போம்.

கே.—இதுதான்: ரகுநாததேவர் பொய்யான நல்ல நாயக உடையாரோடு பேசிக்கொண்டிருப்பார்; அவருடைய பெண்ணை ராத்திரி நீர் அழைத்துக் கொண்டு வரவேண்டுமாம். நேராக இங்கேவாராமல், அவளுடன் மீனாக்ஷியம்மன் கோவில் வீதியில் பாஸ்கரத்தேவர் வீட்டுக்குப்போம்; அங்கே எல்லாம் தயாராகவிருக்கிறது. ராத்திரியிலேயே தாலி கட்டிவிடவேண்டும். இவ்வளவுதான் நான் சொல்வேன் இதற்கு உம்மால் கையால் ஆகாதபோனால் வசிதேசுவரியின் எண்ணத்தையே விட்டுவிடலாம். (போகிறான்).

விஜ.—அடே! கேசவா!

கே.—நான் நிற்கமாட்டேன்; எனது எஜமானர் ஒரு புரோகிதரை அழைத்துக்கொண்டு பாஸ்கரத்தேவர் வீட்டுக்கு வரச்சொல்லி யிருக்கிறார்; நான் போகவேண்டும்; அங்கே வாரும் பேசிக்கொள்வோம். (போதல்)

விஜ.—இந்தத் திருட்டுக் கல்யாணத்துக்கு இவள் சம்மதிப்பாளோ, என்னவோ? இருந்தாலும் கூடிய வரையில் பார்ப்போம். (போதல்)

களம் 5. ஒரு பாட்டை

(கௌதமி, பிரதாபருத்திரர், நாராயணதேவர், வருதல்)

நா.—வா, போவோம்; இன்னும் இப்படிச் செய்தாயானால், கட்டாயம் திரும்பிப்போய்விடுவேன்; அடடா! எவ்வளவு அழகாய்ச் சந்திரன் பிரகாசிக்கிறது, பார்!

கௌ.—சந்திரனா? சூரியனல்லவா அது? நெருப்பாகத் தகிக்கிறதே. சந்திரனென்கிறீர்களே!

நா.—இவ்வளவு சோபையுடன் பிரகாசிப்பது சந்திரன் என்றுதான் சொல்லுகிறேன்.

கௌ.—ஐயோ! அது சந்திரன் அல்ல. சூரியன் தான் அப்படிப் பிரகாசிக்கிறது.

நா.—அதென்ன? நான் சந்திரனென்கிறேன்: நீ சூரியனென்கிறாயா? சந்திரனோ, நக்ஷத்திரமோ, நான் எப்படிச் சொல்லுகிறேனோ, அப்படியே இருக்கவேண்டும்; இல்லாவிட்டால் உன் பிறந்தகத்துக்குப் போகமாட்டோம்; அடே! யாரடா அவன்? வண்டியைத் திருப்பி ஓட்டு; எப்போது பார்த்தாலும் இந்தத் தொல்லைதானா? எடுத்ததற்கெல்லாம் குறுக்கே நின்று தடுக்கிறதுதானா வேலை?

பிர.—அவர் சொல்லுகிறபடியே சொல்லேன்; இல்லாவிட்டால் ஊருக்குப் போவது முடியாது.

கௌ.—வண்டியைத் திருப்பவேண்டாம்; அப்படியே போகட்டும்; இவ்வளவு தூரம் வந்துவிட்டோமே. சூரியனாகத்தானிருக்கட்டும், சந்திரனாகத்தான் இருக்கட்டும் நக்ஷத்திரமாகக்கூட இருக்கட்டும்; வேண்டுமானால் விளக்காகவும் இருக்கட்டும்; உங்களுக்கு எப்படித்தோன்றுகிறதோ அப்படியே யிருக்கிறதாக நான் பாவிக்கிறேன். சத்தியம், இது சத்தியம். வேண்டுமானால் ஆணையிட்டும் கொடுக்கிறேன்.

நா.—அதோ தெரிகிறதே அது சந்திரன்.

கௌ.—ஆமாம்; அது சந்திரன் தான்.

நா.—நீ பொய் சொல்லுகிறாய்; அது சூரியனல்லவா?

கௌ.—ஆமாம்; அது சூரியன் தான்.—உங்களுக்கு சூரியனல்லவானால் எனக்கும் அல்ல; உங்கள் மனம் போனபடியே என் மனமும் திரும்பும். அதை நீங்கள் என்ன பேரிட்டழைக்கிறீர்களோ, அந்தப் பேராலேயே நானும் அழைக்கிறேன்.

பிர.—தேவரே! நீர் ஜெயித்துவிட்டீர். நீர் சாமர்த்தியசாலிதான். சந்தேகமில்லை.

நா.—சரி! இனிமேல் தைரியமாய்ப் போகலாம்; இதோ வருகிறது யார்?

(நல்ல நாயக உடையார் வருதல்)

அம்மணி! வாரும் (நல்லநாயக உடையாரை நோக்கி) எங்கிருந்து வருகிறீர், அம்மா?—கௌதமி! இந்தப் பாட்டியைப்போன்ற அழகுடைய வேறொரு ஸ்திரியை நீ பார்த்திருக்கிறாயா? அவள் பிறைபோன்ற நுதலையும், வாள்போன்ற கண்களையும் பார். கோது! அவளைக் கட்டிக்கொள்

கௌ.—பெண்ணே! வா; இவ்வளவு அழகாகவிருக்கும் சின்னஞ் சிறு பெண்ணான நீ தனியாக எங்கே போகிறாய்? நீ இருக்கிறது எவ்விடம்? தாயார் தகப்பனார் இருக்கின்றனரா? உன்னைப் பாரியையாக அடைந்த மகா புருஷன் யாவன்?

நா—என்ன, கோது? உனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா? இவன் ஒரு தொண்டு கிழவன் அல்லவா? தலையெல்லாம் நரைத்துவிட்டது; உடம்பெல்லாம் திரை மிகுந்திருக்கிறது. அவனைப் பார்த்துப் பெண் என்கிறாயே?

கௌ.—ஐயா! மன்னிக்கவேண்டும்; சூரிய வெளிச்சத்தால் என் கண் மங்கிப் போய்விட்டது; பார்ப்பதெல்லாம் பச்சைப் பசேலென்றிருக்கிறது; இப்போது தெரிந்தது, நீங்கள் ஒரு விருத்தரென்று; மன்னிக்கவேண்டும்.

நா—பெரியவரே! எங்கே போகிறீர்? எங்களோடு கூட வருவீரானால் எங்கள் வண்டியிலேறிக்கொள்ளும், போகலாம்.

நல்.—தள்ளாத கிழவனிடத்து அநுதாபம் காட்டுகிற உங்களுக்கு க்ஷேமமுண்டாகும்; நான் இருப்பது தஞ்சை நகரம்; என் பெயர் நல்ல நாயக உடையார் என்பது; மதுரைக்குப்போகிறேன். என் மகன் அங்கே யிருக்கிறான்; அவனைப்பார்த்து வெகு நாளாய்விட்டது; ஆதலால் அவனைப் பார்க்கப்போகிறேன்.

நா.—அவர் பேரென்ன?

நல்.—அவனுக்கு விஜயராகவஉடையாரென்றுபேர்.

நா.—அப்படியா! எனக்கு அவரை நன்றாகத் தெரியுமே. நீங்களும் எனக்கு இப்போது உறவாகிவிட்டீர்கள். இவள் தங்கையைத் தான் உமது மகன் கல்யாணம் பண்ணிக்கொள்ளவிருந்தார்; இந்நேரம் கல்யாணம் முடிந்திருக்குமென்று எண்ணுகிறேன். நீர் ஏதோ ஆச்சரியப்படுகிற மாதிரி தோன்றுகிறதே. நல்லகுலம்; நல்ல சம்பந்தம்; உமக்குச் சொல்லியனுப்பாமல் கல்யாணம் நடந்திருக்குமோ என்று யோசனையோ? அதனால் ஒன்றும் பாதகமிருக்காது; அவசரத்தினால், அவ்வாறு செய்திருக்கலாம்; எல்லாம் நாம் ஊருக்குப்போனதும் விளங்கிவிடும்.

நல்.—நீர் சொல்வது உண்மைதானா? இல்லாத போனால் வேடிக்கை பண்ணுகிறீரா?

பிர.—ஐயா! அது முற்றிலும் உண்மை.

நா.—வாருங்கள்; இதன் உண்மையை நீரே நேர அறிந்து கொள்ளலாம். முதலில் நாங்கள் வேடிக்கை பண்ணியதினால், எல்லாவற்றையும் வேடிக்கையென்று நினைக்கிறீர்களாக்கும்!

(நாராயணத்தேவர், கௌதமி, நல்லநாயக உடையார் மூவரும் போதல்.)

பிர.—பேஷ்! நாராயணத்தேவரே! உம்மிடம் வேண்டியவளவு கற்றுக்கொண்டுவிட்டேன்; என் அத்தைமகள் இவ்வாறு இருந்தால், அவளை வழிப் படுத்தும்வழி தெரிந்துவிட்டது. (போதல்)

அங்கம் V

களம் 1.—மதுரை விஜயராகவ உடையாரின் வீட்டு முன்புறம்

(ஒரு புறத்தில் கேசவன், விஜயராகவ உடையார், வஙிதேசுவரி பிரவேசித்தல். மற்றொரு புறத்தில் பொன்னம்பலத்தேவர் வருதல்).

கே.—மெதுவாய் ஓசைப்படாமல் போகவேண்டும்; புரோகிதர் தயாராகவிருக்கிறார்.

விஜ.—நான் ஜாக்கிரதையுடன் போகிறேன்; உன்னை ஒருசமயம் வீட்டில் தேடுவார்கள், ஆதலால் நீ போய்விடு.

கே.—குற்றமில்லை; முதலில் உங்களைக் கொண்டு போய் விட்டுவிட்டு, பிற்பாடு ஓடிப்போகிறேன்.

(விஜயராகவஉடையார், வஙிதேசுவரி, கேசவன் இவர்கள் போதல்).

பொ.—நாழிகை அதிகமாக ஆய்விட்டது. இன்னும் கோவிந்தவாத்தியார் வந்தபாடில்லையே!

(நாராயணத்தேவர், கௌதமி, நல்லநாயக உடையார், பொன்னன், பரிவாரங்கள், வருதல்).

நா.—இதுதான் விஜயராகவ உடையாரின் ஜாகை. என் மாமனார் வீடு கடைத்தெருவுக்குச் சமீபத்தில் இருக்கிறது. ஆதலால் நான் உங்களைவிட்டுப் போகவேண்டும்.

நல்ல.—ஏன் அவ்வளவு அவசரம்? இருந்து ஏதாவது கொஞ்சம் ஆகாரம் பண்ணிக்கொண்டுபோகலாமே. (கதவைத் தட்டுகிறான்.)

பொ.—உள்ளே ஏதோ காரியமாக விருக்கிறார்போலும்; கொஞ்சம் பலமாய்த் தட்டுங்கள்.

(மேல்மாடி ஜன்னல் வழியே தீர்த்தயாத்திரி எட்டிப் பார்த்தல்.)

தீர்.—யாரடா, அவன்? கதவை உடைத்து விடுவான் போலத் தட்டுகிறது?

நல்ல.—உள்ளே விஜயராகவ உடையார் இருக்கிறாரா. ஐயா?

தீர்.—இருக்கிறார்; ஆனால் இப்போது வெளியில் வந்து பேசமாட்டார்.

நல்ல.—ஒரு மனிதன் இரண்டாயிரம் மூவாயிரம் ரூபா கொண்டுவந்திருக்கிறார் என்று அவரிடம் சொல்லும்.

தீர்.—போங்காண்; போம்; உம்முடைய பணத்தை நீரே வைத்துக்கொள்ளும்; நான் இருக்கிறவரையில் அவனுக்குப் பணத்துக்குக் குறைவில்லை.

நா.—பார்த்தீரா, ஐயா! உமது மகன் வெகு கண்ணியமாக விருப்பதை?—ஐயா, நீர் உள்ளே சென்று, விஜயராகவ உடையாரிடம் அவர் தகப்பனார் தஞ்சையிலிருந்து வந்து வாசலில் காத்துக் கொண்டிருக்கிறார் என்று சொல்லும்.

தீர்.—என்னடா, முழுப்பூசனிக்காயைச் சோற்றில் மறைக்கப் பார்க்கிறாய்? அவருடைய தகப்பனார் நான்தான்; இதோ இருக்கிறேனே!

நல்.—நீயா அவன் தகப்பன்?

தீர்.—சந்தேகமில்லாமல் நான்தான்; சாக்ஷி வேண்டுமோ? அவன் தாயார்தான் அப்படிச் சொல்லுகிறாளே.

நா.—(நல்ல நாயக உடையாரை நோக்கி) ஏன், ஐயா? பெருத்த மோசமாக இருக்கிறதே. உம்முடைய பெயரை வேறொருவன் ஏற்றுக்கொண்டிருக்கிறான்போலும்.

(கேசவன் திரும்பிவருதல்)

கே.—கொண்டுபோய்விட்டு வந்துவிட்டேன்; இந்நேரம் தாலிகட்டி யாகிவிடும்;—அடே! இது யார்? பெரிய எஜமானர் நல்ல நாயக உடையார்போலத் தோன்றுகிறதே! சரி, மோசம் வந்துவிட்டது! இந்நேரம் செய்ததெல்லாம் வீணாக முடிந்துவிடுமோ?

நல்.—எலே! கழுதை! இங்கே வாடா.

(கேசவனைப்பார்த்துக் கூப்பிடல்.)

கே.—என்ன, ஐயா, உமதுவீட்டுப் பண்ணைக்காரப் பையல்போலக் கழுதையென்றும், "டா" பட்டம் போட்டும் பேசுகிறீர்?

நல்.—சீ! போக்கிரி! என்னை மறந்துவிட்டாயோ?

கே.—நன்றாக விருக்கிறது! உங்களை நான் முன்பேனும் பின்பேனும் அறிந்திருந்தால் அல்லவா ஒருவேளை மறக்கலாம்; நான் இதற்குமுன் உங்களைப் பார்த்ததே யில்லையே.

நல்.—நீ என் வேலைக்காரன் கேசவன் இல்லையா; உன்னை என் மகனுடன் கூட அனுப்பினேனே? மறந்துபோய் விட்டாயோ? இல்லாதபோனால் போக்கிரித்தனம் செய்கிறாயோ?

கே.—நான் உம்முடைய வேலைக்காரனா? எதாவது கனவு காண்கிறீரோ? எனது எஜமானர் அதோ மேன்மாடியில் நிற்கிறார், பாருங்கள்.

நல்.—நிஜந்தானா? (கேசவனை அடித்தல்.)

கே.—ஐயோ! ஐயோ! கொலை! கொலை! யாரோ என்னைக் கொல்லுகிறார்கள். (போகிறான்)

தீர்.—பையா! சீக்கிரம் போ; ரகுநாததேவரே! நீரும் போய்ப்பாரும்; யாரோஒருவன் நமது சேவகனைக் கொல்லுகிறானாம்.

(மேன்மாடியினின்றும் போதல்.)

நா.—கோது! இங்கே தனியாக நின்று இந்தவேடிக்கையை முழுவதும் பார்ப்போம்.

(அவர்கள் தனியே நிற்கின்றனர்.)

(தீர்த்தயாத்திரி கீழே வருதல் ரகுநாததேவர், சுப்பராயன், சேவர்களும் உடன் வருதல்.)

சுப்.—நீர் யார், ஐயா? ஏன் என் சேவகனை யடித்தீர்?

நல்.—நான் யாரா? நீ யார் என்று நான்தான் கேட்கிறேனே.—அடே என்சாமி! ஜரிகை தலைப்பாகை, பட்டு வேஷ்டி, வெல்வெட்டு சட்டை! குடிகெட்டுப் போய்விட்டது! நான் வீட்டில் மிகவும் செட்டாகக் குடித்தனம் பண்ணுகிறேன்; இங்கே படிக்கிறதற்கு வந்த என் மகனும் அவன் வேலைக்காரனும் டாம்பீகமாய் அடாத செலவுகள் செய்கிறார்களே! வெகு நன்றாகவிருக்கிறது!

சுப்.—என்ன, ஐயா? என்ன சங்கதி?

ரகு.—எதாவது பைத்தியம் பிடித்திருக்கிறதா. இவருக்கு?

சுப்.—ஐயா! உம்மைப் பார்த்தால் நல்லவர்போலத் தோன்றுகிறது; ஆனால் உமது செய்கைகள்மாத்திரம் பைத்தியம் பிடித்தவன் செய்பவைபோலவிருக்கின்றன. நான் நல்ல ஆடையாபரணங்கள் தரித்துக்கொண்டிருந்தால், உமக்கென்ன? என் தகப்பனார் கொடுக்கிறார்; நான் செலவழிக்கிறேன்.

நல்.—உன் தகப்பனா? அவன் ஏற்றக்குடியில் மண்வெட்டி பிடித்தல்லவா கொத்துகிறான்.

ரகு.—ஐயா! நீர் யாரையோ! எண்ணிச் சொல்லுகிறீர். இவர் பெயர் என்ன தெரியுமா, உங்களுக்கு?

நல்.—இவன் பெயரா? எனக்குத் தெரியாதாக்கும்! மூன்று வயதுக் குழந்தைமுதல் நான் வளர்த்து வருகிறேனே. அவன் பெயர் சுப்பராயன் என்பது.

தீர்.—போடா, போ, பைத்தியக்காரா; அவன் பெயர் விஜயராகவ உடையார்; அவன் நல்லநாயக உடையாராகிய என் மகன் அல்லவா?

நல்.—விஜயராகவனா! ஐயையோ! என் மகனை இவன் கொன்றுவிட்டான்! அவனைப் பிடித்துக் கொள்ளுங்கள்.—ஐயோ! மகனே! மகனே! நாசமாய்ப் போகிறவனே! என் மகன் விஜயராகவன் எங்கே சொல்லு.

சுப்.—போய்க் கொத்தவாலை அழைத்து வா.

(ஒருவன் கொத்தவாலுடன் திரும்பிவருதல்).

இவனை சிறைச்சாலைக்குக் கொண்டுபோங்கள்.

நல்.—என்னையா சிறைச்சாலைக்குக் கொண்டுபோக வேண்டும்!

போ.—ஓய் கொத்தவால்! கொஞ்சம் பொறும்: அவசரப்படாதேயும்.

ரகு.—தேவரே! நீர் சும்மா இரும்; அந்தக்கிழவன் சிறைக்குப்போகட்டும்.

போ.—ரகுநாததேவரே! ஜாக்கிரதையாக இரும்; ஏமாந்து போய்விடுவீர்; இவர் தாம் நிஜமான நல்ல நாயகஉடையார்.

தீர்.—ஆணையிட்டுச் சொல்லுவீரா?

போ.—இதற்கெல்லாம் ஆணையிடவேண்டுமா?

சுப்.—அப்படியானால் என் பெயர் விஜயராகவ உடையார் என்பது இல்லையென்பீரோ?

போ.—நீர் விஜயராகவ உடையார்தாம்; எனக்கு நன்றாய்த் தெரியும்.

ரகு.—அவனுக்கு ஒன்றும் தெரியாது; யாரோ மடையன்; உடனே சிறைச்சாலைக்கு அழைத்துப் போங்கள்!

நல்.—இப்படியா அந்நியன் ஒருவனை வதைக்கிறது:—அடே படுபாவி! மோசம் செய்துவிட்டாயே!

(விஜயராகவ உடையார், வநிதேசுவரி இவர்களை யழைத்துக்கொண்டு கேசவன் திரும்பி வருதல்).

கே.—மோசம்போனோம்! இதோ இருக்கிறார், அவர்: மறுத்துவிடும்; இல்லையானால் வீண் வந்துவிடும்.

விஜ.—அப்பா, மன்னிக்கவேண்டும். (நமஸ்காரம் செய்தல்.)

நல்ல.—குழந்தாய்! உயிரோடு உன்னைக் கண்டேனே! (கட்டித்தழுவல்.)

(கேசவன், சுப்பராயன் தீர்த்தயாத்திரி ஓடிப் போதல்.)

## குமார ஸம்பவம்
### BIRTH OF KUMARA

பண்டித நடேசசாஸ்திரியார் மொழிபெயர்ப்பு.

77. ஒன்றுமில்லாதவரா யிருந்தும் அவர் எல்லாவித ஸம்பத்துகளுக்கு மிருப்பிடமாய் விளங்குகின்றார். அவர் மயானத்தில் வஸித்துக்கொண்டே மூவ்வுலகங்களுக்கும் நாதனாய் விளங்குகின்றார். அவர் பயங்கரமான உருவங்கொண்டவர் என்றாலும் அவர்பெயர் அழகானவர் (சிவன்) அன்றோ? இதுவரையில் சிவபெருமானை உண்மையாக ஆராய்ந்தறிந்தவர்கள் ஒருவருமில்லையன்றோ!

78. ஒரு சமயத்தில் அவர் தனது மேனியை நகைகளால் சிங்காரித்துக்கொண்டிருப்பார். மற்றொருசமயத்தில் பாம்புகளையே அணிந்து விளங்குவார். ஒரு சமயத்தில் அவர் யானைத்தோல் உரித்து உடுத்திருப்பார். மற்றொரு சமயத்தில் வெண்பட்டு உடுத்திருப்பார். தன் தலைமேல் ஒருபொழுது மண்டைஓட்டைக் கவிழ்த்துக்கொண்டிருப்பார். மற்றொருபொழுது சந்திரனையே அணிந்திருப்பார். எட்டு உருவங்கொண்டு விளங்கும் ஜகதீசனுடைய உடலை அறிந்தவர்களுமுண்டோ!

79. சுடலைச்சாம்பல் அவர் மேனியில் பட்டமாத்திரத்தில் மற்றவர்களைப் பரிசுத்தம்பண்ணும் மேற்பதவியை அடைகின்றதன்றோ? அதே சாம்பற்பூசி அம்பலத்தாடி தாண்டவம் செய்யும்பொழுது அவர் மார்பினின்று உதிரும் சுடலைச்சாம்பலை தலையில் ஏந்திக்கொள்ள தேவர்கள் காத்து நிற்கின்றார்களன்றோ!

80. ஒன்றுமில்லாத அச்சிவபெருமான் எருதின் மீதேறிச் செல்லும்பொழுது தான், மதம் பெருகும் திக்குயானை எறிவரும் இந்திரன், அவர் பாதங்களை தனது தலையால் வணங்கி தான் தலையிலணிந்த நன்றாக மலர்ந்திருக்கு மந்தாரைமலர்களின் பூந்தாதுகளால் அவருடைய கால்விரலை அலங்காரம் பண்ணுகின்றான்.

81. கெட்டுப்போன நீ, சிவபெருமானிடம் தோஷங்கள் இவை என்று எடுத்துச் சொல்லும்பொழுது ஒன்றைமட்டும் உண்மையாகச் சொன்னாய். தானாய்த் தோன்றிய பிரமதேவருக்கும் காரணமாய் சிவபெருமானை மாமுனிவர்கள் குறிக்கும்பொழுது அவருடைய காரணத்தைக்கண்டறிய எவரால் முடியும்.

82. உன்னுடன் விவாதம் செய்வதில் என்னபிரயோஜனம்? உனக்கு முற்றிலும் நீ கேள்விப்பட்டபடியே சிவபெருமானிருக்கட்டும். நானோசிவபெருமானிடம் என்னாசையை முற்றிலும் வைத்துவிட்டேன். தனது மனத்தின்போக்குப்படி நடக்கின்றவர்களை உலகநிந்தை ஒன்றும் பண்ணமுடியாதன்றோ.

83. அடி தோழி இவனை இங்கு விட்டு அப்புறப்படுத்து. இவன் உதடு அசைகின்றதைப் பார்த்தால் இவன் மறுபடியும் ஏதோ பேச எத்தனிக்கின்றவன் போல் காண்கின்றான். பெரியவர்களை நிந்தித்துப் பேசுகின்றவன்மட்டுமே பாவியல்ல, அவன் செய்யும் நிந்தையைக் கேட்கின்றவர்களும் பாவிகளாகின்றார்கள்.

84. அல்லது நாமே இவ்விடம்விட்டு வேறிடம் போவோம் என்று சொல்லிக்கொண்டு அச்சிறுமி வேகத்தால்தான் தனது குசங்களின்மேல் மூடியிருந்த மூன்றானை பறக்க அவ்விடம்விட்டுநடக்கலானாள். இடபக்கொடியோனும் தனது நிஜ உருவங்கொண்டு புன்சிரிப்புடன் அவளைப்பற்றிப் பிடித்துக்கொண்டான்.

85. சிவபெருமானைக் கண்டதும் மெய்பதற தேகமெல்லாம் வியர்வை ஓட வெட்கந்தோன்ற அப்பார்வதி தான் பிரயாணத்துக்காக முன்னெடுத்த காலை அப்படியே நிறுத்தினவளாய் வெகுவேகமாக ஓடிவரும்வெள்ளம் குறுக்கே ஒரு பெரும் மலை ஓங்கி நிற்கக்கண்டதும் முன்னும்போகமுடியாமல் பின்னும் போகமுடியாமல் குழம்பி நிற்பதுபோல் மனம்பதறி நின்றாள்.

86. "பார்வதி, இன்றுமுதல் நான் உனது அடிமையாய்விட்டேன். உனது தவத்தால் நீ என்னை விலைக்குவாங்கிவிட்டாய்" என்று சந்திரசேகரன் சொல்லவே பார்வதி ஒரு பெருமூச்செறிந்து அன்னைவரையில் தான் தவத்தால் பட்டிருந்த சிரமத்தை அத்துடன் தன்னைவிட்டு அகற்றினாள். நாம் பட்ட சிரமத்துக்குத் தக்கபயன் நமக்குக் கிடைத்துவிட்டால் அந்த சிரமம் சிரமமாக அதன் பிறகுதோன்றவே தோன்றாதல்லவா?

### உமையை வரித்தல் என்ற
### 6-வது சருக்கம்

அவ்வாறு தேவதேவன் தம்மிடம் அருள்புரிந்த பின்பு பார்வதியும் இரகசியமாய் தனதுதோழியிடம் சிவபெருமானுக்கு ஒரு சமாசாரம் சொல்லியனுப்பினாள். அது யாது எனில் தம்மைத் தமது தந்தையா

கிய இமவான் சிவபெருமானுக்கு கன்னிகாதானம் செய்துகொடுக்கும்படி உத்தரவாகவேண்டும் என்பதேயாம்.

2. அவ்வண்ணம் தமது தோழி மூலமாய் சிவபெருமானுக்குச் சமாசாரம் சொல்லியனுப்பின பின்னர் அப்பார்வதி அவரிடம் மாறாத அன்புடன் துடிக்கின்றவளானாள். வசந்தகாலத்தில் எப்பொழுதும் குதூகலத்துடன் விளங்கும் கட்டுமாங்கிளைகுயில் தன்னிடம்வந் துட்சாரக் காண்பதை எதிர்பார்த்துக் கொண்டுதவித்து நிற்குமன்றோ!

3. மன்மதனையே தீயிட்டு எரித்த அச்சிவபெருமானும் அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு தீராதபக்ஷமாக உமையிடம் விடைபெற்று அவ்விடம்விட்டு நீங்கி சோதி உருவாய் விளங்கும் ஆங்கிரஸர் முதலான ஏழு ரிஷிகளையும் தம் மனத்தால் கருதலானார்.

4. தவத்தையே தங்கள் பொருளாகக்கொண்ட அம்மாமுனிவர்கள் தங்கள் தேக ஒளியின் சமூகத்தால் ஆகாயத்தையே விளங்கச் செய்துகொண்டு அருந்ததியுடன்கூட உடனே ஈசனார் முன்பாகவந்து தோன்றினார்கள்.

5. கரையில் ஓங்கிநிற்கும் மந்தார மரத்தின் மலர் உதிரப்பெற்ற அலைகள் அம்மலர்களையே வாரிவீச, திசைக்கரிகளின் மதமணம் பரிமளிக்க விளங்கா நிற்கும் ஆகாயகங்கையின் ஜலத்தில் ஸ்நாநம்செய்தவர்களாய்

6. நல் முத்தாலாகிய பூணூல் அணிந்து பொன்மரவுரிபூண்டு ரத்தினக்கற்களால் கோர்க்கப்பட்ட ஜபமாலை கைப்பற்றி துறவறம் சேர்ந்த கற்ப தருக்கள்போல் விளங்குகின்றவர்களாய்

7. தாம் ஸூரியமண்டலத்துக்குமேலே ஸஞ்சரிக்கின்றவர்களாகையால் தங்களிருப்பிடத்துக்குக்கீழாகதனது குதிரைகளை ஓட்டிச்செல்லும் சூரியபகவானால் தன் ரதத்தின் கொடியைத் தாழச்செய்து நமஸ்காரத்துடன் கண்களை மேலெடுத்துப்பார்க்கப் பெற்றவர்களாய்

8. மகா விஷ்ணுவின் மகாவராஹ அவதாரத்தின் கோரப்பல்லை தமது கையால் பற்றச்செய்து ஆதரவுடன் தூக்கி எடுக்கப்பெற்ற பூமாதுடன் பிரளயகாலத்திலும் அழிவின்றி சுகமாய் இளைப்பாறுகின்றவர்களாய்

9. பிரமதேவருக்கு அடுத்த பதவியில் அவர் படைத்து நிறுத்தியதின்மேல் இன்னும் மிகுந்திருந்த படைப்புகளை படைத்த காரணத்தால் பெரியோர்களால் பழைய பிரமதேவர்கள் என்று புகழப்படுகின்றவர்களாய்

10. முற்பவத்தில் நிர்மலமான தவத்தின் அருளடைந்து அத்தவத்தின் பயனை முனிவர்களாயிருந்தபோதிலும் இச்சென்மத்திலும் அனுபவிக்கின்றவர்களாய் (விளங்கிய அம்மா முனிவர்கள் ஏழு பெயர்களும் அங்குவந்து தோன்றினார்கள்.)

11. அவர்கள் நடுவில் தனது கணவன் பாதங்களிலேயே கண்வைத்தவளாய் மகாபதிவிரதையாய் தவத்தின்பயனே உருவெடுத்து வந்தாற்போல சோபிக்கின்றவளாய் அருந்ததி தேவி வெகுஅழகாக விளங்கலானாள்.

12. ஈசனார் அம்மாது சிரோன்மணியையும் அம்மாமுனிவர்களையும் ஏற்றத்தாழ்வின்றி ஒரேவிதமாய் உபசரிக்கலானார். பெரியோர்கள் ஸ்திரீ புருஷன் என்ற வித்தியாஸத்தை ஒருபொழுதும் கவனியார்கள். நல்லொழுக்கம் ஒன்றேயன்றோ அவர்கள் எப்பொழுதும் கொண்டாடிப்புகழும் குணம்.

13 அருந்ததியைக் கண்டபிறகு ஈசனுருக்கு தாமும் மனையாட்டியை வெகுசீக்கிரம் அடையவேண்டும் என்ற ஆவல் தோன்றிற்று. யாகம் முதலிய இல்லறச் சடங்குகளுக்கு மனைவியன்றோ முதற்காரணம்?

14. இல்லறத்தின்பொருட்டு ஈசனார் பார்வதியைத் தமது மனத்தில் நினைத்ததும் முதற்குற்றத்தை நினைத்து நடுங்கி நின்ற மன்மதனுடைய பிராணனும் மறுபடியும் மூச்சுக்காற்றுள்ளது போலாயிற்று.

15. அம் மாமுனிவர்கள் எல்லோரும் ஈசனாரை வணங்கியபின்னர் ஜகத்குருவாகிய அக்கடவுளைப் பார்த்து வேதமொழுகும் தங்கள் வாய்களால் அன்புநிரம்பிய தங்கள் மேனி மயிர்க்கூச்செறிய பின்வருமாறு சொல்லலானார்கள்.

16. நாங்கள் நியமபூர்வகமாய் இதுவரையில் ஓதியவேதமும் நாங்கள் இன்றுவரைமுறைப்படி வளர்த்துவந்த ஓமமும் நாங்கள் செய்துவந்த தவமும் இவைகள் எல்லாவற்றினுடைய பயனும் இன்றுதான் எங்களுக்கு நிறைவேறியது.

17. உங்கள் மனமோ ஒருவருடைய வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதமனம். அவ்விதமாகிய உங்கள் மனத்தாலேயே எல்லா உலகங்களுக்கும் ஈசனாகிய நீங்கள் எங்களை நினைக்கும்படியான பாக்கியம் பெற்றோமென்றால் எங்கள் பெருமைக்குச் சொல்லவும் வேண்டுமோ?

# நாகரீகம்

## CIVILIZATION

(சாவித்திரி சரித்திர ஆராய்ச்சி)

தற்காலத்தினராகிய நாம் நாகரீகத்தில் முற்போக்கு அடைய விரும்புகின்றது உண்மையாயின், நம் முன்னோர் போக்கினைப் பின்பற்றி ஒழுகல் இன்றி அமையாததாகும். "நவீன வளர்ச்சி" எனச் செம்பொருள் பயக்கும் "முற்போக்கு" என்னும் பதத்திற்கு, "முன்னோர் நடை" என மற்றொரு நுண்பொருளும் அமைந்து நிற்றலைக் காண்க.

அம்முன்னோர் எத்தகைய செந்நெறி, உண்மை, உறுதி உடையவர்களாய் இருந்தனர் என்பதை நமது பன்னூற்றொகுதிகளும் சாட்சி பகர்கின்றன. அவ்வுண்மை, உறுதி, செந்நெறியாதிய உயர் குணங்கள் அக்காலத்துப் பெரியோர், சிறியோர், ஆடவர், மகளிர் ஆகிய அனைவரிடத்தும் அசைக்கவொண்ணாத இயல்புக் குணங்களாய் அமைந்து கிடந்தமையே அறிதினும் அரியதாகும்.

உதாரணமாக, அசுவபதி மகாராஜாவின் அருந்தவப் புத்திரியாகிய சாவித்திரியின் சரிதத்திற் சிலவற்றை ஆராய்வாம்.

இதில் கதா நாயகியாகிய சாவித்திரி தனக்கேற்ற கணவனைத் தானே தெரிந்து நிச்சயிக்குமாறு, தந்தையாலும் மந்திரி பிரதானியர்களாலும் ஒரு மனதாய் அனுமதிக்கப்பட்டுத் தேச சஞ்சாரம் செய்திருக்கிறாள்.

இரண்டாவது, அப்படிச் செய்த சஞ்சார இறுதியில், ஊழ்வலிகூட்டத் தன் எதிர்பட்ட நாடு இழந்து காட்டில் கஷ்ட ஜீவனம் செய்து காலம் கழித்த மாளவதேசாதிபதியின் மைந்தனை—ஸத்தியவான் என்னும் வாலிபனிடத்துத் தன் மனம் செல்ல அவனே மணக்கத் தக்கவன் எனமதித்து உறுதி கொண்டு திரும்பிவந்து தந்தையிடம் அறிவிக்க, உடனிருந்து கேட்ட முக்காலும் உணர்ந்த முனிவர் பெருமானாகிய நாரத பகவானால் "அப்படி வரித்த வரன் ஆண்டொன்றில் ஆயுள் உலக்கக்கூடிய அற்ப ஆயுள் உடையவனாதலால்" அக்கருத்தை மாற்றி வேறு வரனைத் தெரிந்துகொள்ளுமாறு பலவாறு வற்புறுத்தினமை கேட்டும் சித்தம் சலியாது, ஓர்கால் மனதால் மணந்த ஒருவனை மாற்றி இன்னொருவனை ஒருபோழ்தும் கருதமுடியாதென மறுத்ததும், அதனால் எதுவரினும் வருக என்று உறுதியுடன் அவனையே மணக்க விரும்பியதும் ஈண்டு ஒவ்வொருவரும் ஆழ்ந்து சிந்திக்கற் பாலதன்றோ?

என்னே முற்கால மகளிரிடத்து அமைந்திருந்த உறுதி! என்னே மனச்சான்று! என்னே கற்பு! என்னே அறத்தாறு! ஆயின், இத்தகைய உயர் குணங்கள் அச்சாவித்திரியைப் பயந்த பெற்றோரிடத்தும் உள என்பதற்கு, அன்னோர், தமது அருமைப் புதல்வியின் மனவுறுதியைக் கண்டு மாற்றுதல் அரிது என்று உணர்ந்து மனம் உவகந்து ஒத்த மனப்பாங்கினராய் அவ்வரனுக்கே மணஞ்செய்து அளித்தமையே சான்று பகர்கின்றது.

இத்தகைய ஒப்புயர்வற்ற கற்புறுதியும், ஸத்திய புத்தியும், கலங்காத்திட்பமும் கண்டன்றோ அறக்கடவுளும் அக்காந்தையின் கணவன் உயிரைக் கவர்ந்து வக அஞ்சி விடுத்து ஏகினன் போலும்! இதனினும் அரிய பெரியனவும் உளவோ?

அப்பெண்மணி அக்கடவுள் பாற்கேட்ட இதர வரங்களில் தன்னைப்பெற்ற தந்தைக்கு மக்கட்பேறு இல்லாக் குறையை நீக்க முதலிற் கோராது தனது மாதுலனாகிய மாளவ தேசாதிபதியின் இழந்த கண்களையும் ராஜ்யத்தினையும் முதலிற் கோரியது இக்காலத்திய ஒவ்வொரு மகளிர்க்கும் அறிவுறுத்துவதாமன்றோ?

தருமசாஸ்திர ஆராய்ச்சியினும், ஆய்ந்தவழி ஒழுகுதலினும் நமது பூர்வீக ஆரிய நாரீமணிகட்கு மேற்போன நாகரிகர்கள் எத்தேசத்திலும் இருந்திருக்கமாட்டார்களென்பதே நமக்கு இன்றும், இனியும், பெருஞ்சிறப்பைத் தந்து பெருமைப் படுத்துவதாகும்.

தவிரவும், மெல்லிய தேகமும் சுகவாழ்வும் பெற்ற நமது பூர்வீக க்ஷத்திரிய மாதர்கள் ஸத்தியம், கற்பு, நீதி இவைகட்குக் கட்டுண்டு சமயம் வாய்த்த போதெல்லாம் எண்ணமுடியாத கஷ்டங்களையும் வறுமைகளையும் உற்சாகத்துடன் பணிவாய் ஏற்று அநுபவித்து வந்திருப்பதை எண்ணுங்கால் மனம் கூசுகின்றது. இப்பெரிய நடையினைச் சாவித்திரி சரிதத்தில் மிகுதியாகக் காணலாம்.

இக்குண விசேஷம் அக்காலங்களில் செல்வச் செழுமுகைகள் அன்ன சந்திரமதி, தமயந்தி, நளாங்கினி முதலிய கணக்கற்ற ராஜபுத்திரிகளிடத்தும் அமைந்து நின்றது உண்மை. அரசவர்க்கத்திற் பிறந்து அரண்மனை போகத்தில் ஆழ்ந்து யிருந்தயுவதிகளின் பயிற்சியே அத்தகையது என்னின் ஏனைய குலமாதர்களின் தன்மை எவ்வாறு இருத்தல்கூடும் என்பதை உய்த்துணரால் எளிதாகும்.

சீரியல் பழுத்த ஆரிய மணிகாள்? இதுவரையில் நாம் மேலே ஆராய்ந்து கண்டவைகளைப்போல் ஒவ்வொரு சரிதங்களிலும் ஆராய்ந்து காணக் கடவன அளப்பிலவாகும்.

அவ்வகை ஆராய்ந்து அதற்கேற்ப நாம் வேண்டிய திருத்தங்களைச் செய்து கொள்வதே "நாகரீகம்" என்னும் மொழிக்குப் பொருளும் பயனும் ஆகும். விரிக்கில் இதுபோல் கவனிக்கற் பாலன பலவுள எனினும், விரிவஞ்சி இம்மட்டோடு முடிக்கலாயிற்று.

அசலாம்பிகை அம்மாள்.

## ஹாலிஞ்சியிலுள்ள சுடுநீர் ஊற்றுகள்

### HOT SPRINGS AT HALINGZI

மேல் பர்மாவில் ஷ்வீபோ அல்லது ரத்தினசிங்கா(Shwebo) விலிருந்து வண்டிப்பாதை வழியாக தென்கிழக்காய் 11-மைல்தூரத்தில் ஹாலின் என்னும் ஒரு கிராமமிருக்கிறது. அது மாக்ஸோஜியோன் (Moksogyon) ரயில்வே ஸ்டேஷனிலிருந்து $4\frac{3}{4}$-மைல் தூரத்திலுள்ளது. ஸ்டேஷனிலிருந்து கட்டைவண்டியிலேறித் தான் ஹாலினுக்குப்போக வேண்டும். அதில் சுமார் 500-குடிசைகள் இருக்கும். 1901-ஷத்து ஸென்ஸஸ் பிரகாரம் அவ்வூரின் ஜனத்தொகை 2076. ரயில் பாதை போடுவதற்கு முந்தி மாண்டலேயிக்குப் போகும் ரஸ்தாவில் இது ஒரு முக்கிய தங்கு ஊராகவிருந்தது.

ஹாலினில் ஒரு டிஸ்டிரிக்டு பங்களாவிருக்கிறது. அதில் போய் தங்கியிருக்க சார்ஜு ஒன்றும் கொடுக்கவேண்டியதில்லை. அன்றியும் அங்கே பிரயாணிகள் தங்கியிருப்பதற்காக அநேக சாவடிகளும் கட்டப்பட்டிருக்கின்றன. சாப்பாட்டிற்கு வேண்டிய கோழி, முட்டை, பால், கறிகாய், இவைகள் சரசமாகக் கஷ்டமின்றி அவ்வூரில் கிடைக்கும்.

இவ்வூருக்கு 2-மைலுக்குத் தெற்கே ஹாலின் ஏரி என்று ஒரு ஏரி இருக்கிறது. அது அதிக ஆழமில்லை. ஏழு மைல் நீளம் தெற்குவடக்காய் ஓடுகிறது. அதன் அகலம் சராசரி இரண்டுமைலிருக்கும்.

இவ்வூரில் வருஷத்துக்கு சுமார் 31-அங்குலம் மழை பெய்கிறது. இதுவும் இதன் சுற்றுப்புறங்களெல்லாம் உலர்ந்ததாயிருக்கும். நவம்பர்மீ ஆரம்பமுதல் மார்சுமீ மத்திவரையில் குளிர்காலமாய் இருக்கும். மார்ச்சு மாதத்தின் மறுபாதியும், ஏப்ரல் மே மாதங்களும் கொடுவேனிற்காலம். தர்மாமீட்டரில் இங்கே சுமார் 108 டிக்ரி இருக்கும். 1906-வது வருஷத்தில் ஒருநாள் தர்மாமீட்டர் நிழலிலிருந்தபோதும் டிக்ரி 114-ஆகவிருந்தது. ஜூன்மீத்தில் சாதாரணமாய் மழைபெய்யும். ஜூலையிலும் ஆகஸ்டிலும் மழை பொழியாது. ஆனால் தென்றற்காற்றும் யேகங்களும் சூரியவெப்பத்தைத் தணித்து வேனிற்காலத்தை இன்பமாகமாற்றும். ஸெப்டம்பர், அக்டோபர் மாதங்கள் மழை காலம். சாகுபடிக்கு அவ்வூர் ஜனங்கள் இம்மழையைத்தான் எதிர் பார்ப்பார்கள். ஆனால் இப்பொழுது கவர்ன்மெண்டார் கால்வாய் ஒன்று வெட்டி ஜனங்களின் சாகுபடிக்கு உதவி செய்து இருக்கிறார்கள்.

பூமி மண் களியாகவும், சதுப்பாகவும் இருக்கும். மேற்றரையெல்லாம் உப்புமண்ணாயிருக்கும். ஆதலால் ஹாலினில் உப்பு உண்டாக்குகிறார்கள்.

குடிசைகளுக்கிடையே அநேக ஊற்றுகளிருக்கின்றன. அவற்றினின்றும் வரும் நீர் உப்புக்கரிக்கும் சுடுநீராயிருக்கும். கவர்ன்மெண்டு ஆர்க்கியாலஜிஸ்டி (Goverment Archælogist)ன் அபிப்பிராயப்படி முன்னொருகாலம் மூ (Mu)என்னும் ஆறும் ஹாலின் கிராமத்தின் வழியாகச் சென்றிருந்ததாம். இப்பொழுது இருக்கும் ஏரிகள் பூர்வத்தில் மூ ஆறு ஓடிய இடமே என்கிறார். இவ்வேரிகளில் சிலவற்றின் நீர் குளிர்ந்திருக்கும், சிலவற்றின் நீர் கொதித்துக் கொண்டிருக்கும், சிலவற்றின் நீர் உப்புக்கரிக்கும். சிலவற்றின் நீர் இனிப்பாயிருக்கும். ஏரிகளில் அநேகம் ஒன்றுக்கொன்று அருகாமையிலேயேயிருக்கும். ஹாலின் பூர்வத்தில் ஒரு பெரிய நகரமாயிருந்தபோது அதில் 9-அற்புதங்கள் இருந்தனவாம். அவற்றில் இவ்வேரிகள் ஒரு அற்புதமாம்.

இவ்வளவு ஏரிகளிலும் நான்கு ஏரிகள்தான் முக்கியமாய் உபயோகப்படுத்தப்படுகின்றன. இவற்றின் உஷ்ண ஸ்திதி ஒன்று 106-டிக்ரியும், ஒன்று 112-டிக்ரியும், ஒன்று 114-டிக்ரியும் நாலாவது 126-டிக்ரியும் இருந்தது. இந்த நாலாவது ஏரி ஜலத்தில் ஒரு முட்டையைப் போட்டால் அது வெந்துவிடுமென்று பர்மர்கள் சொல்லுகிறார்கள். இரண்டாவது ஊற்றிலும் மூன்றாவது ஊற்றிலும் ஜலம் உப்பு நிறைந்ததாயிருக்கிறது.

இப்பொழுது குடிசைகளடங்கிய ஹாலின் கிராமம் பூர்வத்தில் ஹம்ஸநகரம் என்று சொல்லப்பட்ட ராஜ்யத்தின் பிரதானநகரமாயிருந்ததாம். இவ்வூருக்கும் அடுத்த நாபியோ என்னும் ஊருக்கும் இடையில் பிரம்மாண்டமான புளியமரங்களிருக்கின்றன. ஒன்றின் சுற்றளவு $24\frac{1}{2}$-அடியும், மற்றொன்றின் சுற்றளவு 18-அடியுமென்று கவர்ன்மெண்டு ஆர்க்கியாலஜிஸ்டு அவருடைய 1904-05-வது வருஷ ரிப்போர்ட்டில் எழுதியிருக்கிறார். பௌத்த நகரங்களெல்லாம் சூரியன் உதிக்கும் திசையை நோக்கக் கட்டப்பட்டிருக்கும். இந்து நகரங்களும் சீன நகரங்களுந்தான் தெற்கு திசையை நோக்கிக் கட்டப்பட்டிருக்கும். ஹாலின் தெற்குப்பாகம் நோக்கிக் கட்டப்பட்டிருக்கிறது. அன்றியும் இந்திய நாணயங்களும், பிம்பங்களும், வீட்டுச்சாமான்களும், அடிக்

கடி அப்பழைய நகரத்திலிருந்தும் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன. ஆதலால் இவ்வூர் கங்காதீரத்திலிருந்தும் வந்து குடியேறிய இந்தியர்களின் நகரமாயிருந்திருக்க வேண்டுமென்று கவர்ன்மெண்டு ஆர்க்கியால ஜிஸ்டு அபிப்பிராயப்படுகிறார். பழைய ஹம்ஸநகர மிருந்ததற்கு அடையாளமாக ஒரு இடிந்த செங்கற்சுவர் ஒன்று தென்படுகிறது.

தமாயிங்கு (Thamaing)என்னும் பர்ம சரித்திரத்தில் ஹாலினைப்பற்றி பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது. ''பனாரிஸ் அல்லது காசியிலிருந்து வந்த கராபா (Karabaw) என்னும் இந்திய அரசன் இந்நகரத்தைக் கண்டுபிடித்தான். அவன் மகாகமத மன்னனின் இரண்டாவது மகன். ஹம்ஸநகரத்தை உண்டாக்கின காலம் இன்னதென்று ஏற்படவில்லை. ஆனால் பியூமின் (Pyumin) என்பவன் தன்சகோதரன் பியோன் மின் (Pyonmin) என்பவனை இளவரசனாக வைத்துக்கொண்டு அந்நகரில் கி. பி. 168 முதல் 234 வரையில் ஆண்டதாகச் சரித்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. பியூமினுக்கு முன்னால் ஹம்ஸநகரத்தில் 799 அரசர்கள் ஆண்டதாக மாயிங்கில் சொல்லியிருக்கிறது.'' பியூமின் காலத்தில் ஹம்ஸ நகரத்திலிருந்த ஒன்பது அற்புதங்களாவன :—

1. நான்கு திசைகளையும் நோக்கி நான்குகிளைகளையுள்ள ஒருநார்மரம், கிழக்குகிளையில் பூக்கும் புஷ்பங்கள் வெள்ளை நிறமாகவும், தெற்குகிளையில் பூக்கும் புஷ்பங்கள் பழுப்பு நிறமாயும், மேற்குப் புஷ்பங்கள் இரத்த சிவப்பு நிறமாயும், வடக்குப் புஷ்பங்கள் சுவர்ண நிறமாயுமிருக்கும்.

2. உப்பு நீர் இனிப்பாக ருசிக்கும்.

3. லோகா மரத்தினின்றும் இடைவிடாது நீர் பெருகிக்கொண்டு ஒரு அருவியாக ஓடுவது.

4. இரண்டு கூபங்கள் பூமிக்குக் கீழே ஒரு இடைவழியால் இணைக்கப்பட்டிருந்தன. சுவர்ண மயமாயும், வெள்ளி மயமாயுமிருந்த இரண்டு விலாங்கள் (ஒருவித ஆமை) கூபத்திலிருந்து மற்றொரு கூபத்துக்கு நீந்திக்கொண்டேயிருக்கும்.

5. கொதிநீரும், குளிர்நீரும் நிறைந்த இரு அருவிகள் ஓடி ஒறாய் ஓடியபோதும் கொதிநீரும் குளிர்நீரும் ஒன்றோடொன்று கலவாமல் தனித் தனியே ஓடின. இவ்வாற்றில் ஒரு பக்கத்திலிருந்து கொதிக்கும் ஆவியேயெழும்பிக் கொண்டிருக்கும். மற்ற பக்கத்தில் ஒன்றுமிராது.

6. மழைகாலத்தில் வறண்டும், வேனிற்காலத்தில் சேறாகியுமிருந்த ஒரு சதுப்பு நிலம்.

7. ஒரு பேர் பெற்ற மாமரத்துக்கு 9-கிளைகளிருந்தன. ஒவ்வொரு கிளைக்கும் ஒன்பது கொம்புகளுண்டு. ஒவ்வொரு கொம்பிலும் ஒன்பது குலையும், ஒவ்வொரு குலையிலும் ஒன்பது பழங்களும், ஒவ்வொரு பழத்திலும் ஒன்பது சுவையுமிருந்தன.

8, ஒரே பனைமரத்தில் சில கிளைகளிலிருந்து நீரும், சில கிளைகளிருந்து பனஞ்சாறும் ஒழுகின.

9. நகரத்தைச் சுற்றிலும், அறியத்தரமற்ற விதமாய்க் கானங்கேட்டுக் கொண்டேயிருந்தது.

அதே சரித்திரத்தில் இளவரசன் புன்சிரிப்புக் கொண்டபோதெல்லாம் அவன் உதடுகளிலிருந்து சுவர்ண ஆபரணங்களும் வெள்ளி ஆபரணங்களும் உதிர்ந்து கொண்டேயிருந்தன. ஒருநாள் பட்டமகிஷி இளவரசன் சிரிப்பதைப்பார்க்க விரும்பி தன் கணவனிடம் அவருடைய சகோதரனைச்சிரிக்கும்படி கட்டளையிடும்படி வேண்டிக்கொண்டாள். அப்படியே அரசன் கட்டளையிட்டான். ஆனால் இளவரசன் தான்சிரித்தால் தன் மகிமையைக்கண்டு இராணி தன்மேல் மோகித்துவிடுவாளென்றெண்ணி அரசன் கட்டளைக் குடபடாதிருந்தான். இதன் மேல் அரசனுக்குக் கோபமுண்டாகி தன் தம்பியை கொலைசெய்து விடும்படியாக உத்திரவிட்டான். இவ்வாக்ஜ்ஞையை நடத்தியதும் ஆகாயம் கருத்து பயங்கரமாக மாறிற்று. பெரும்புயற்காற்று வீசி ஆகாயத்திலிருந்து கத்தி, ஈட்டி, வாள் முதலிய ஆயுதங்கள் விழுந்து குடிகளையெல்லாம் அழித்து நகரத்தையும் சாம்பலாய் மூடிவிட்டது. இதில் பியூமினும் இறந்தான். அந்நகரம் நாசமானதற்கு இதுதான் காரணம்.

மேல் பர்மாவிலுள்ள பர்மர்களுக்கெல்லாம் ஹாலின் ஊற்றுகளின் சிலாக்கியம் நன்றாய்த்தெரிந்திருக்கிறது. பாரிசவாய்வு, சொஸ்தமாகாத வீக்கங்கள், கட்டிகள், பருக்கள், சிரங்கு, மூலவியாதி, பெண்களின் மாதவிடாயை யனுசரித்த வியாதிகள்; இவற்றிற்கெல்லாம் இவ்வூற்றுகளில் ஸ்நானம் செய்தால் நிவாரணம் என்று சொல்லுகிறார்கள். இப்பொழுது வருஷத்துக்கு சுமார் 100-பேர்கள் வியாதியை சொஸ்தம் பண்ணிக்கொள்ளும் பொருட்டு அவ்வூருக்கு மாண்டலே, காதா, ஜில்லாக்களிலிருந்து வருகிறார்கள். அவர்கள் குளிர்காலத்தில் வந்து ஒருவாரமிருந்து ஊற்றுகளில் ஸ்நானஞ் செய்துவிட்டுப் போவார்கள்.

அவ்வூர் ஜனங்களும், சுற்றுக் கிராமங்களிலுள்ளவர்களும், அவ்வூற்றுகளில் தினம் வெந்நீர் ஸ்நானம் செய்கிறார்கள்.

1893-வருஷத்தில் மேஜர் மாக்நாமாரா என்னும் ராணுவ வைத்தியர் ஒருவர் பாரிசவாயுவினால் மிக்க தொந்தரைப்பட்டுகொண்டிருந்தார். கைகால் பூட்டுகளில் இருந்த பெரு வலியால் அவர் தன் வேலையைச் செய்யமுடியாமலேயிருந்தார், அவர் ஹாவின் போய் ஒருவாரமோ பத்துநாளோதான் அவ்வூற்றுகளில் ஸ்நானஞ்செய்தார். அதற்குள் அவருக்கு வலியெல்லாம் தீர்ந்து திரும்பவும் ஒரு சங்கடமின்றி தன் வேலையைப்பார்த்துவர சக்தியுடையவரானார்.

கர்னல் லாயிட் என்பவர் தான் அவ்வூற்றுகளில் ஸ்நானஞ்செய்ததால் அதிக நன்மை யடைந்ததாகச் சொல்லிக்கொள்வதுண்டு.

1901-வது வருஷத்தில் மேஜர் காந்தப் பிரசாத் என்னும் டாக்டர் சீனாவிலிருந்து ரங்கூனுக்குத் திரும்பிவந்தபோது அவருடைய மனைவி பாரிசவாயுவினால் படுக்கை விட்டு எழுந்திருக்கக்கூடாமல்கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தார். மேஜர் பிரசாதுக்கு ஷ்வீபோவுக்கு மாற்றலானதும் தன்மனைவியை அவ்வூற்றுகளுக்கு இட்டுக்கொண்டுபோய் ஸ்நாநம் செய்வித்தார். ஒரு மாதத்துக்குள் அம்மாது எழுந்து நடக்கத்திறமுள்ளவராயினார். இப்பொழுது 9-வருஷமாக அந்த அம்மாளுக்கு அவ்வியாதி திரும்பவும் வராது சௌக்கியமாகவிருக்கிறார்.

ஷ்வீபோ ஸ்டேஷன் மாஸ்டராயிருந்த தூவின் என்பவர் பல வருஷங்களாக பாரிசவாயுவினால் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தார். 1905-வது வருஷத்தில் அவர் அதிக தொந்தரவு பட்டதினால் ஷ்வீபோ ஜில்லாவில் சிவில் ஸர்ஜனாயிருந்த மேஜர் பிரசாதினுடைய புத்திமதிப்படி அவர் ஹாவின் ஊற்றுகளில் போய் ஸ்நாநம் பண்ணினார். கொஞ்ச நாள்களில் அவரும் முழுதும் சௌஸ்தமாகிவிட்டார்.

இன்னும் அநேக பர்மர்கள் அவ்வூற்றுகளில்போய் நீராடி வியாதி தெளிந்திருக்கிறார்கள்.

இவ்வூற்றுகள் வெட்ட வெளியிலிருப்பதால் ஆடு மாடுகள் போய் அவற்றை அசுத்தப்படுத்தி விடுகின்றன. அவற்றிற்கு வேலியாவது அடைப்பாவது சீக்கிரம் போட்டால் ஸ்நாநத்திற்கு யோக்கியமாயிருக்கும்.

இவைபோன்ற சுடு நீரூற்றுகள் ஆம்ஹர்ஸ்டு ஜில்லாவிலும் அநேகமிருக்கின்றனவாம்.

# சிறுவர்க்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

---

உபகாரம் செய்தல்.—ஒருவன் தனக்கு இருந்த பேராசையால் தன்னிடம் ஓர் துர்தேவதை அல்லது பிசாசு வசப்பட்டிருந்தால் தன் மனதிற்கு தோன்றிய காரியங்களை சீக்கிரத்தில் முடித்து ஆனந்தத்தை அடையலாம் என்று எண்ணினான். இந்த எண்ணத்துடன் அவன் ஓர் யோகியை அடுத்து தனக்கு ஓர் துர்தேவதை வசப்படும்படி செய்யவேண்டும் என்று மிகுந்த வணக்கத்துடன் கேட்டுக்கொண்டான். யோகி தனது வேண்டுகோளைக் கொஞ்சநாள் கவனியாமல் இருப்பதைக் கண்டு, இவன் அடிக்கடி அவரைச் சென்று விடாது கேட்கத் தொடங்கினான். ஒருநாள் யோகி இவனுக்கு ஓர் மந்திரத்தை உபதேசம்செய்து 'இதைவிடாது கொஞ்சநாள் ஜபித்தால் ஓர் துர்தேவதை பிரத்யக்ஷம் ஆகும் அது உன் வசப்படும். ஆனால் அதற்கு வேலை இட்டுக்கொண்டே இருக்கவேண்டும். வேலை இடாது விட்டால் அது உன்னைக் கொன்றுவிடும்! ஜாக்கிரதை!' என்று எச்சரிக்கை செய்து அனுப்பினார். யோகி சொன்னபடி துர்தேவதை பிரத்யக்ஷமாக அந்த பேராசைக்காரன் 'என் தரித்திரம் நீங்கும்படியான ஏராளமான பணம் வேண்டும்' என்று கேட்டான். பணம் உடனே வந்து குவியும்படி அந்த தேவதை செய்துவிட்டது. 'எனக்குத் தகுந்த ராஜ்யம், அரண்மனை, ஸ்திரீகள், சிப்பந்திகள் முதலியன வேண்டும்' என்று அவன் வெளியிடும் முன், அவன் எண்ணப்படி எல்லாம் தயாராகிவிட்டன. இம்மாதிரி அவன் ஆசைகள் யாவும் சீக்கிரம் பூர்த்தியாகிவிட, துர்தேவதைக்குக் கொடுக்க வேலை இல்லாது அவன்மனம் தத்தளித்தது. எதுசொன்னாலும் அது உடனேசெய்துவிட்டு, "மேல் என்ன வேலை? இல்லாவிட்டால் உன்னை விழுங்கிவிடுவேன்" என்று சொல்லி அவன் முன் வந்து நிற்கின்றது. அவனுக்கு பூர்வ ஜன்மாந்திர ஸுகிருதம் இருந்ததால், எப்படி இந்த துர்தேவதையிடமிருந்து பிழைப்பது என்ற ஏக்கமுண்டாக, அவன் மௌனமானான். இதைக்கண்ட துர்தேவதை அவனை விழுங்கவர, அவன் வெருண்டு ஓடத்தொடங்கினான். அவன் ஓட தேவதை துரத்த பேராசைக்காரன் தனக்கு மந்திரம் உபதேசித்து அருளிய யோகி பாதத்

தில் வந்து சரணம் புகுந்து தனது கஷ்டத்தைத் தெரிவித்தான். இதற்குள் துர்தேவதை, 'உன்னை விழுங்கிவிட்டுத்தான் மறுகாரியம்' என்று கூக்குரலிட்டுக்கொண்டுவந்து யோகியின் உத்தரவுப்படி ஒதுங்கி நின்றுவிட்டது. 'பேராசை பெருநஷ்டம்,' என்று அவனுக்கு புத்தி கூறிவிட்டு யோகியானவர் சுருண்டிருக்கும் தமது சடை ரோமத்தில் ஒன்றை (சுருண்டிருக்கும் நாய்வால் ஒன்றை) துர்தேவதை கையில் கொடுத்து அதை நீட்டும்படி ஏவினார். அது மெதுவாக நீட்டிவிட்டு கையை எடுத்தது. உடனே அது சுருண்டுகொண்டது. இப்படி அநேகம்தரம் செய்தும் அதனால் அதை சுருண்டு கொள்ளாமல் நீண்டுநிற்கும்படி செய்யமுடியவில்லை 'இது ஏதப்பா! இது என்னால் முடியாது' என்று வெட்கி அந்த தேவதை ஓடிப்போய் விட்டது. பேராசைக்காரனும் பயம்தெளிந்து ஸுகமடைந்து தனது பேராசையை விட்டுவிட்டான்.

இந்த ஸாதாரண கதையின் உட்கருத்தே முக்கியமானது. இதில் உள்ள துர்தேவதையே மனது. பேராசைக்காரனே ஸாதாரண மனிதன். யோகிதான் ஆசாரியன். ஆசாரியன் சிஷ்யனது ஆசைக்கு ஏற்ப மனதின் சக்தியை வெளிப்படுத்த அதனால் அவனுக்கு ஆசைகள் பூர்த்தியாகியும் 'துக்கம் ஒழிந்தாலும் சுகமில்லையப்பா' என்று ஓர் மஹானது வாக்கியத்தின்படி அவனுக்கு ஸுகமுண்டாகாமல் வரவர சஞ்சலமும் பயமுமே உண்டாகின்றது. இதை அவன் ஆசாரியனுக்குத் தெரிவிக்க அவர் மனதிற்கு சுருட்டை மயிராகிய உலகத்திற்கு நன்மை செய்தல் என்ற வேலையைக் கொடுக்க அதுமுதல் மனிதன் கஷ்டங்கள் அதிகமாகாது மனதுமுடிவில் வெட்கித்திரும்பி அந்தர் முகப்படும்படியான நிலை வருகின்றது.

இக்கதையிலிருந்து, உலகு ஒருவராலும் ஸுகமடையாது, அது ஸதா இருந்தபடி மாறாதிருக்கும் என்பது உண்மையாயினும், இதை அறிந்து உபகாரம் புரிவதே மனிதனுக்கு வியவஹாரத்தில் சஞ்சலம் தீர்க்கும் வழி என்பதை தெரிந்துகொண்டு நாம் 'எமக்கென்னென்று இட்டுண்டிருக்க வேண்டும்'. இதைவிட்டு உலக ஹிதமாக எவ்வளவு தான் தந்தி, தபால், இருப்புப்பாதை முதலியன ஏற்படுத்திய போதிலும் உலகத்திலுள்ள ஸுகதுக்கம் முன்போலாவது அல்லது முன்னிலும் அதிகப்பட்டாவது இருக்கும் என்பதை இக்காலத்திய நூதன நாகரீகத்தால் விளையும் கஷ்டங்களே நன்கு விளக்குகின்றன.

தன்னைவிட்டு எண்ணுதல் அல்லது தசபுமான் கதை.—அவிவேக பூரணர் என்ற குருவுக்கு பத்துப் பேர் சிஷ்யர்கள் இருந்தார்கள். ஒருநாள் இவர்கள் ஓர் ஆற்றைக்கடந்து போகவேண்டி நேரிட்டது. அக்கரை சென்றதும், எல்லோரும் கரையேறிவிட்டார்களா என்று பார்ப்பதற்காக ஒருவன் எண்ணத் தொடங்கி தன்னைவிட்டு எல்லோரையும் எண்ணி ஒன்பது பேர் இருப்பதைக்கண்டு திடுக்கிட்டு ஒருவனைக்காணோமே ஆற்றில் மூழ்கி இறந்தானோ என்று கூறித் துக்கிக்கலானான். இதுபோல மற்றவர் எல்லோரும் எண்ணி ஒன்பது பேரைக்கண்டு பத்தாவது மனிதனைக் காணாது மிகுந்த துக்கத்தை அடைந்து பரிதவித்தனர். இப்படியிருக்கையில் கொஞ்சதூரத்தில் ஒரு ஸாது ஒருவர் ஸமாதியிலிருப்பதைக்கண்டு அவரிடம் சென்று தமது குறையை இவர்கள் தெரிவித்தனர். இதைக்கேட்டதும் அவர்கள் மூடத்தனத்தையும் அதனால் விளைந்த துக்கத்தையும் கண்டு அவர் அன்புடன் நகைத்து 'நீங்கள் பத்துப்பேர் இருக்க ஏன் வீணாகத் துக்கப்படுகிறீர்கள்' என்று தேற்றினார். உங்கள் குற்றம் என்னவெனில் 'ஒவ்வொருவனும் மற்றையவர்களை எண்ணிவிட்டுத் தன்னைமாத்திரம் எண்ணாதுவிட்டு விட்டான். இதனால் நீங்கள் பத்துப்பேரிருந்தபோதிலும் உங்களுக்கு ஒன்பது பேரிருப்பதாகத் தோன்றியது' என்று சொல்லியும் விஷயம் விளங்காது அவர்கள் தத்தளிப்பதைக் கண்டு ஸாதுவானவர் ஒருவனை முன் அழைத்து மற்றையவர்களை எண்ணச்சொல்லி பின்பு அவன் பேரில் கையை வைத்துக்கொண்டு 'இத்தனை பேர்களையும் எண்ணிய நீதான் பத்தாவது மனிதன்' என்று மற்றவரிடம் இருந்து அவனை பிரித்துக் காட்டினார். ஒன்பதுமுடியும் வரையில் மிகுந்த ஆவலோடிருந்த சிஷ்யர்கள் ஸாது எண்ணியவன்மேல் கையை வைத்துப் பத்து என்றதும், ஸந்தோஷம் அடைந்து ஸாதுவை வாழ்த்தினட்டு தாண்டவமாடிக்கொண்டு சென்றனர்.

இக்கதை மனிதன் நிலையை நன்கு உணர்த்துகின்றது. அவ்விவேகபூர்ணகுரு என்பது அஞ்ஞாவிம். சிஷ்யர்கள் கடந்த ஆறு மோஹம். இதைத் தாண்டினால் அல்லது எவனுக்கும் தன்னைத் தான் நோக்கி எல்லாம் ஸரியாக இருக்கிறதா என்று விசாரிக்கும் சக்தி உண்டாகாது. அப்படி விசாரிக்குங்கால் தன்னிடம் ஒன்பது விஷயங்களிருப்பதை மனிதன் காண்கிறான். அவையாவன:—திருக்கு (பார்ப்பவன்) திருச்யம் (பார்க்கபடும் பொருள்) திருஷ்டி

(பார்வை); கர்த்தா (செய்பவன்) காரியம் (செய்பொருள்) கர்மம் (செய்கை); போக்தா (அனுபவிப்பவன்), போக்கியம் (அனுபவிக்கப்படும் பொருள்), போகம் (அனுபவம்). இவை தவிர பத்தாவது ஒன்று உண்டென்பது மாத்திரம் அவன் ஞாபகத்திலிருக்கிறது. அது இன்னதென உணர முடியாததால் அது இருக்கிறதோ இல்லையோ என்ற ஸந்தேகம் உண்டாய் விடுகின்றது. இதனால் மனிதனுக்கு துக்கம் உண்டாக அவன் குருவைச் சென்றடைகிறான். கதையில் அவரை ஸாதுவாக உருவகப்படுத்தி இருக்கின்றது. குரு ஒன்றையும் புதிதாக ஸ்ருஷ்டிக்காது, அவன் உணராமல் மறந்த அவனது ஸ்வரூபத்தைக் காட்ட முற்கூறிய ஒன்பது வித ஸம்ஸாரங்கள் பெயரைசசொல்லி, இது நீயல்ல இது நீயல்ல என்று நீக்க சேஷித்திருக்கும் தனது ஸ்வரூபத்தை அவனே யறிகின்றான். இம்மாதிரியாக தனது ஸ்வரூபத்தைத் தான் அறிந்ததும் முன் இருந்த துக்க நீங்க அவன் ஆனந்தத் தாண்டவ மாடிக்கொண்டு குருவை வாழ்த்துகிறான்.

இக்கதையையும் இதன் கருத்தையும் பின்வருமாறு கைவல்ய நவநீதத்தில் சுருக்கிச் சொல்லப்பட்டிருக்கிறது.

*    *    *    *

'பத்துப்புருடரோ ஆற்றை நீந்தி
உதகதீரத்தி லேறி யொருவன்
ஒன்பது பேரெண்ணி
அதனொடு தசமன் தான்
என்று அறியாமல் மயங்கி நின்றான்.

அறியாத மயல் அஞ்ஞானம்
அவனில்லை காணேமென்றல்
பிறியா ஆவரணமாகும்
பிழைகொண்ட முல்விபக்ஷேம்
நெறியாளன் தசமனுண்டு
நிற்கின்றான் என்றசொல்லை
குறியாக எண்ணிநெஞ்சில்
கொள்வது பரோக்ஷஞானம்.

புண்ணிய பதிதன் பின்னும்
புருடர் ஒன்பதின்மர் தம்மை
எண்ணும் நீ தசமனை
என்னவே தன்னைக்காணல்
கண்ணில் கண்ட ஞானம்
கனைதல் போவது நோய்போதல்
திணணிய மனத்தில் ஐயம்
தெளிதலா நந்தமாமே.

இதில் முற்கூறிய கதையின் மூலமாக ஜீவனுக்கு ஏழவஸ்தை உண்டாகும் விதத்தை நன்கு விளக்கப் பட்டிருக்கிறது.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

## LADIES' PAGES

---

## ஸீதை அல்லது தர்மத்தின் ஸ்வபாவம்

### 3. உலகிற்குழைத்த காதை

(தொடர்ச்சி)

உழைக்கவேண்டுமென்று ஆவல் உண்டாகிவிட்டால் அதை விட்டொழிய மனம்வராது. அவ்வாறாயினும் தாம் செய்வதில் ஜயம் உண்டாகுமோ உண்டாகாதோ என்ற ஸந்தேஹம ஒருவேளை வந்தாலும் வரலாம். இதனால்தான் நம்பிக்கை அவசியமாகிறது. ஓர் பாவம் சிறந்ததென்று பட்டால், அதன் வழிநடக்கவேண்டிய விடத்தில்வரும் கஷ்டங்களைக் கடக்க மனோதைரியம் அதிகமாக வேண்டும். இதில் உத்ஸாகம்முண்டு. ஹிருதயத்தைமலரச் செய்தாலன்றி மனது கவலையடையாதிராது. அக்கவலையை நீக்க, சில ஸம்பவங்கள் நடந்து தர்மசிந்தனத்தை பிரகாசிக்கச் செய்யவும், நம்பிக்கையை திடப்படுத்தவும், கடவுள், பாவத்தின் சிறப்பைக்காட்டும் செயல்களை, நடக்கச் செய்கிறார். இதேமாதிரிதான் ஹநுமார் சொல்லியதும் ஸீதைக்குத்தான் உழைக்கவேண்டிய தவச்யகமென்று பட்டாலும் அது முழுதும் நடத்தினால், நம்மைக் காப்பாற்ற கடவுள் அநுக்ரஹம் உள்ளதோ என்ற ஸந்தேஹம் உண்டாகிவிட்டது. ஆனால் திரிசடையினது மொழிகளும் விபீஷணன் மனைவியின் மொழிகளும் அவளது மனதைத் திடப்படுத்தி நின்ற நிலையில் நிலைக்கச்செய்தன. அவைகளெல்லாம் கொஞ்சகாலம்தான். மனதிற்கு உத்ஸாகமூட்டிய தொன்றுதான். இராவணனால் ஏவப்பட்டு அரக்கர்கள் ஹநுமாரது வாலில் நெய்த்துணிகள் கட்டி நெருப்பிட்டதும், அவர் இலங்கை முழுதும் எரித்தபொழுது அசோகவனத்தில் ஸீதையிருந்த விடத்திலிருந்த மரம் அழியாது ஸீதையைக் காத்ததவளுக்கு ஓர் சிறந்த நம்பிக்கையை யுண்டாக்கிவிட்டது. கடவுளது பூரண அநுக்ரஹம் அவள்மேல் பிரகாசித்ததென்றவளுக்குப் பட்டது.

நம்பிக்கை உண்டாக்கி அவரை நம்பிக்கையில் திடசித்த முடையார்களாவென்று பரிக்ஷிப்பது கடவுளினது ஸ்வபாவம். நம்பிக்கையில் ஜீவிப்பவர் எக்கஷ்டம் வரினும் தாங்கள்தைரியங் கொண்டவராக இருக்கவேண்டும். வருங்கஷ்டங்களைக் கண்டு

பயப்படக் கூடாது. தமக்குயிரைக் கொல்லுவதுபோலவும் துயரம்—:அதையும் கணிசியாது நன்னெறியில் நடந்தால் அது ஒன்றும் செய்யமாட்டாது. இதே விதமாக இராவணன், ஹநுமாரது மொழியைக்கொண்டு, இராமன் தன்னை எதிர்க்கவேண்டி வந்திருக்கிறான் என்று தெரிந்ததும், கலகத்திற்கு காரணமாகிய ஸீதையை அவர்கேட்டவண்ணம் அனுப்புவதில்லையென்று வீரங்கொண்டு மாயையால் இராமன் தலைபோலொன்றுண்டாக்கி அதை ஸீதை முன் எறிந்தான். "உன் இராமனிறந்தான், இனி என்னைக்கூடு" என்றான். ஸீதைக்கு ஆத்ரம்வந்தது. ஆயினும் வாய்த்திறப்பதற்குள் சோர்ந்து கீழே வீழ்ந்துவிட்டாள். ஆனால் மாயையினாலுண்டாவதால் ஞானத்தை யடக்கமுடியாது. தன்னிலை தனக்கு வரும்வரை ஸீதைமயங்கினாள். ஆனால் தனது நாயகன் நினைவு வந்ததும், அவருடைய வீரமும் குணமும் மாயையாற் கொல்லமுடியா தென்றவளுக்குப் பட்டதும் எதிரிலிருந்த இராமன் தலையைக் காணமுடியவில்லை. இராமன் கொல்லப்படவில்லை என்றும் நிஸ்சயமாகிவிட்டது. விபீஷணனன் மனைவி உரைத்த மொழிகளும் அவள் மனத்தைத் தேற்றியது. இராமன் தன்னைக் காக்க வந்துவிட்டான் என்றும் அவளுக்கு தெரிந்துவிட்டது.

"இனி இராமன் வந்தான். ஆனந்த மெனக்குண்டாகிவிட்டது. அவர்க்கு ஜய முண்டாகட்டும்," என்று இரவும் பகலும் கடவுளை தியானித்த வண்ணமாக நின்றாள் ஸீதை. தான் கொண்டபாவத்தின் நிலை நன்றாய் அவளுக்கு பட்டுவிட்டது. தான் இராக்ஷஸக் கூட்டங்களின் அழிவிற்குக்காரணமென்றும் தெரிந்தது. தான் வீணில் கஷ்டப்படவில்லை என்றும் அவளுணர்ந்தாள். பெண்களின் நிலைமையை உயர்த்த தானே நிற்கவேண்டுமென்றும்பட்டது கீழ்மையின் அழிவைக் காணக் கவலை கொண்டு நின்றாள். கீழ்மையின் ப்ரபாவமும் அதன் பரவும் தன்மையுங் வரவரத்தான் குறைக்கமுடியும் என்று அவள் எண்ணியபொழுது, திரிஜடை, இராவணன் ஏவலால், ஸீதையை புஷ்பகத்திலெற்றி, இந்திரஜத்தின் மாயையால் மூர்ச்சையாகிக்கிடந்த இரமலக்ஷமணனைக் அவளுக்குக் காட்டினாள் "இவ்வாறுகுமென்று நினைககவில்லையே" என்று மாத்திரம் ஸீதை வெளியில் சொன்னாள். அவள் மனம் உள்புகைந்து நின்றது. ஆனால், சுற்றிலிருப்பவர்கள் மயங்காதிருப்பதைக்கண்டு, இதுவும் துஷ்கிருத்யத்தின்வைபவம்—மாயை—என்று ஸீதை எண்ணியதும், திரிஜடையும் "இது மாயை, நீர் பயப்படவேண்டாம்" என்று சொன்னாள். இவைபோன்ற மொழிகள் கடவுள் நன்னெறியில் நடப்பவர்கள், தமக்கு வரும் கஷ்டத்தைக் கண்டுபயப்படாது தமது நிலையைக்காப்பாற்ற ஊட்டும் உத்ஸாக ஸாதனங்கள் என்பதற்கு ஒரு ஸந்தேகமும் கிடையாது.

4. உலகிற் புகுந்தகாதை

ஆனால் கொடுமையால் நன்மையைக் கொலைசெய்ய முடியாது. முடியாவிடில் அந்நன்மைக்கு இனமாகிய எதையேயனும் நாசம் செய்யவேண்டும் என்று ஆவல் வருவது ஸர்வ ஸாதாரணம். இதேமாதிரி இராவணனும் தன்னால் இராமனை ஜயிக்கமுடியாமையால் இனி அவ்விராமனது உயிர்போல நிற்கும் ஸீதையை நாசம்செய்வேன் என்று ஆரம்பித்தான். ஆனால், அது, நன்மையின் பொருட்டு கடவுளின் அன்பொழுகும் திறமையால், ஸுபார்சுவசன் என்பவனால் தடுக்கப்பட்டு, யுத்தஸந்நதமாய் சென்ற இராவணன் இராமன் அம்பிற்கிரையாகியதும், ஸீதை இராமனேவலால் யுத்தகளத்திற்கு ஸரியான கோலத்தில் கொண்டுவரப்பட்டாள்.

தனக்கு நடக்கை ஸரியாக இருக்குமென்றெண்ணுவது மாத்திரம் தகுதியன்று. உலகிற்கு பொருந்தும்படி நடப்பதுதான் ஒழுக்கத்தின் உயர்வைக் காட்டுகிறது. அதேமாதிரிதான் இராமனும் ஸீதையைநோக்கி, "யான் செய்யவேண்டியதாயிற்று. இனி நீ யாவர்பாலேனும் செல்லலாம். என்னிடம் வரவேண்டுமென்றால் நீ நன்னடக்கை உடையவள் என்று காட்டினால் ஸரி—கொள்வேன்" என்று சொல்லிவிட்டு மௌனமாய் நின்றுவிட்டான். ஸீதைக்குத் தான் இவ்வளவு கஷ்டப்பட்டதும் ஓர் கஷ்டமாகப்படவில்லை. இப்பொழுதெவ்வாறு தன் நடத்தையைக் காட்டுவதென்று பட்டது. ஒன்றும் தோன்றாது திகைத்து இலக்ஷ்மணனைக்கூவி "நீங்கள் எனக்கொரு அக்னிகுண்டம் வளர்த்துத் தாரும். கணவரால் விடப்பட்ட பெண்டிருக்கு ஓர் போக்கிடமும் கிடையாது. அக்னியுட் பிரவேசித்து உயிர்விடுவதுதான் ஸரி" என்று ஸீதை சொன்னாள். இலக்ஷ்மணனும் தமையன் உத்தரவு பெற்று அவ்வாறே செய்தான். ஸீதை இராமனையும் குண்டத்தையும் வலம் வந்து "ஹே! அனல! நான் நன்னடக்கை உடையவள் என்பதற்கு நீயே சாக்ஷி. உன்னை சாக்ஷியாகக்கொண்டு கணவனை வரித்தேன். அவரால் விடப்பட்டபொழுது நீயே என்னைக் காப்பாற்றுவாயாக" வென்ற அதனுள்ளே பிரவேசித்தாள்.

நன்னெறி என்னும் நெருப்பு எதனால் அவிக்கப்படும்? அக்னி பகவான் "ஸீதை நன்னடக்கைக்கு நானே ஸாக்ஷி. இராமா அவளை நீ கொள்வாயாக" வென்றான். அப்பொழுது பரமசிவன் தசரதனுடன் மேலுலகத்திலிருந்துவந்து ஸீதையை வாழ்த்தி இராமரை பரதன் நந்திகிராமத்தில்படுங் கஷ்டத்தைப்போக்க அங்கு செல்லும்படிச் சொன்னார். தசரதர் ஸீதையை நோக்கி "அம்மா இராமன் இவ்வாறு செய்தானென்று கோபம்வேண்டாம். இப்படித்தான் நீ கொண்ட, பெண்களின் பெரியவளென்று பேர் வாங்கக்கொண்ட விரதம், பூரணமாகியது" என்று சொல்லிவிட்டு தேவலோகஞ் சென்றார்.

ஆனந்தமயமாகி இராமர் பூர்ண விச்வாஸத்தோடு ஸீதையைக் கைக்கொண்டு, பரதனைக்காத்து, அயோத்தி நகரத்துட் புகுந்து, தாய்மார்களுக்கு வந்தனம் செய்து, அயோத்தியா நகரத்தில் அரசுவீற்றிருந்தார். ஆனால் ஸீதை ஓர் தினம் காடுகளில் ரிஷிபத்னிகள் வசிக்குமிடம் காணவேண்டும் என்று எண்ணம் அவளுக்கு இருப்பதாகக் கூறியமொழிகள் அவர் ஞாபகத்திலேயே வைத்துக்கொண்டிருந்தனர்.

ஓர்நாள் தமது நகரத்துள் நடக்கும் விஷயங்களை விசாரித்துவருகையில் "இராமன் அயல் வீட்டிலிருந்த பெண்ணைத் தன் வீட்டில் வைத்துக்கொண்டதினால், தாங்கள் பெண்டிரை வைத்திளி ஆள்வது அசாத்திய"மென்ற ஓர் வதந்தி இருப்பதாக அவர்க்குத்தெரிந்தது. உடனே இலக்ஷ்மணனைக் கூவி "ஸீதையைக் காட்டிற்கனுப்பிவிட்டு வா. பிரஜைக்குத் தலைமைபூண்ட நம்மிடத்து சொல்லிற் கிடமிருக்கலாகாது" என்று சொன்னார். இலக்ஷ்மணரும் ஸீதையைக் காட்டில் இராமர் சொல்லியவண்ணம் அவளுக்கு காட்டைக்காட்ட வந்ததுபோல்சொல்லி, விட்டு, அங்கு நிஸ்சயத்தையுங்கூறி, வீடு திரும்பினார்.

தான் உத்தமபெண்டிரின் நிலைமையைக்காக்க வந்தவளென்ற அவளுக்குப் பட்டதென்று நாம் முன்னரே சொல்லி இருக்கின்றோம். இப்பொழுதும் அவ்வாறே எண்ணினாள். தான் கஷ்டப்படுவதெல்லாம் உலகத்தின் தர்மநிலையை நாட்டவென்று தான் அவளுக்குப்பட்டது. அவ்வழியில் நிற்கத்தான் இப்பொழுது அவள் கஷ்டப்படுவதாக அவளுக்குப்பட்டது. ஆனதினால்தான் தன்கணவனும் தன்னை இவ்வாறு தர்மத்தின் நிலைமை தவரக்கூடாதென்று காட்டிற்கு அனுப்பியதாக எண்ணினாள். அவருடைய ஆணையை எதிர்க்க தான் ஆள் அல்லவென்று அவளுக்குப்பட்டது. ஆனதினால்தான் கஷ்டத்தை அனுபவிக்க ஸர்வஸித்தமாக இருப்பதாக நிஸ்சயம் செய்துகொண்டாள்.

இராமரது நோக்கமும் ஸீதையின் நிலைமையும்ஞானக்கண்ணால் கண்டவால்மீக முனிவர் ஸீதையைத் தன் ஆச்ரமத்திற்கு அழைத்துபோய் அங்கு அவளை வைக்கவேண்டும் நிலைமையில் வைத்தார். ரிஷிபத்னிகளும் ஸீதையின் மனோநிலைமையைக் கண்டவளை போற்றிவந்தனர். காட்டிற்கு வந்தபொழுது ஸீதை கர்ப்பமாயிருந்தாள். வால்மீகர் ஆச்ரமத்தில்இலவன் குசலவன் என்றஇரண்டு பிள்ளைகளைப்பெற்றாள்.

இதற்குள் அயோத்தியில் இராமர் அச்வமேதயாகம் செய்ய நிஸ்சயித்தார். பத்தினியில்லாமையால் தங்கத்தால் ஸீதைபோல் ஓர் உருவம்செய்து அதை பத்தினியாக வைத்துக்கொண்டு நடத்தினார். ஆனால் நாம் ஒன்று சொல்ல மறந்துவிட்டோம். வால்மீகர் இலவ குசலவர்களுக்கு ராம சரிதை முழுதும் கானமாகக் கற்றுக் கொடுத்திருந்தனர். இதைச் சத்துருக்நன் கேட்டு பரவசமடைந்துள்ளான். ஆனால் அவனுக்கு இவர்கள் யாரென்று தெரியாது. வால்மீக முனிவரது சிஷ்யர்களென்று மாத்திரம் தெரியும். அசுவமேத மண்டபத்திலவர்களை கானம் செய்யத் தருவித்தனர். இவர்களது முகக்குறியும் குணமும் கண்டு ஸீதையிடம் தனக்குப் பிறந்தவர்கள்தான் என்று இராமருக்கு தெரிந்துவிட்டது. உடனே இராமர் ஜனஸமூஹத்தின் முன்பு தனதுபாதிவிரத்யத்தை காட்டும் பட்சத்தில் தான் ஸீதையைச் சேர்த்துக் கொள்ளவதாக வால்மீகரிடம் சொல்லும்படி தனக்கு நம்பிக்கையுள்ள தூதன் ஒருவன் மூலமாகச்சொல்லி அனுப்பினார். மறுநாள் ஸீதையும் வால்மீகரைப் பின்தொடர்ந்து அச்வமேத மஹா மண்டபத்திற்கு வந்தாள். அங்கு குவித்த கையொடும், திரண்ட மனத்தொடும் ஜனங்களைப் பார்த்து, "யான்—என்றும்—என் —கணவனொருவனன்றி—மற்றவரைக் கண்ணெடுத்து பாராமலு—மல்லாமல் மனத்தினாலு மெண்ணாமலிருக்கும்:—பட்சத்தில்,—இப்பூமிதேவியே, எனக்காதாரமாகி எனக்கோரிடம் தரட்டும்" என்று வாய்திறந்து கூறிக்கொண்டிருக்கும்பொழுதே பூமி வெடித்தோர் விமானம் வந்தது. அவ்விமானத்திலேறி பூமியுள் பிரவேசித்தாள். மறுபடி பூமி மூடிக்கொண்டுவிட்டது. ஸீதையின் பழியும் துலைந்தது. தர்மத்தில் நிலைமையும் நின்றது. அவள் பட்ட கஷ்டத்தில் ஸுகமும் உண்டாகியதென்பதற்கும் ஸந்தேகமுண்டோ. இவ்வகையான தெய்வத் தன்மையால் தான் ஸீதைக் கொண்டாடப்படுவது. தேவியாக எண்ணப்படுவது. தான் வந்த விடத்திலேயே வஸிக்கும்படியாகவும் நேர்ந்தது. தான் உலக ஸ்வபாவத்தில் கலந்து இந்திய தேசத்தின் மரஞ்செடி, மலை ஆறு, மதில் வீடு, குளம் ஏறி, கோயில் முதலிய எல்லாவிடத்தும் கலந்து இந்தியநாட்டு ஸ்திரீயின் நிலைமையையே தெய்வீகத்தன்மையில் மணக்கச் செய்ய பூமியில் மயங்கி விளங்கினாள்—என்பது இராமாயணத்ததை.

வா, சேஷகிரி.

